**தென்துருவம் மீது சோவியத் விமானம் பறந்தது!**

மாஸ்கோ, அக். 26—

தென்துருவம் மீது சோவியத் விமானமொன்று பறந்தது. பனிப் பாறைகள் மயமான அப்பிரதேசத்தில் 2,400 மைல் தூரத்தை 14 மணி நேரத்திற்குள் ஒரே மூச்சில் அந்த விமானம் கடந்தது!

Regd. No M. 5934 Phone: 2241

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI

(வெளியூர் பதிப்பு)



மலர் 15 இதழ் 71 ] சென்னை 27-10-58 விளம்பி௵ ஐப்பசி 11உ திங்கட்கிழமை [ 4 பக்கங்கள் 7 காசுகள்

# பாகிஸ்தான் வாழ்வே இந்தியாவின் வாழ்வு

## அங்கு ஜனநாயகம் புதைக்கப்படுவது குறித்து நேரு கவலை

### காங்கிரஸில் சுயநல கோஷ்டிகள் ஒழியவேண்டுமென்கிறார்

### ஆவடி குறிக்கோளை மறக்காதிருக்க காங்கிரஸ்காரர்களுக்கு புத்திமதி



ஹைதராபாத், அக். 25—

பாகிஸ்தான் பற்றி இந்திய பிரதமர் நேரு இன்று இங்கு நடைபெற்ற அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் குறிப்பிட்டார். பாகிஸ்தான் மக்கள் நல்வாழ்வு வாழ வேண்டுமென்று இந்தியா விரும்புகிறது. ஏனென்றால் பாகிஸ்தானின் நல்வாழ்வுதான் இந்தியாவின் நல்வாழ்வு என்றார் நேரு.

அவர் மேலும் பேசுகையில், பாகிஸ்தான் போன்ற அண்டை நாட்டில் ஜனநாயகம் வேரோடு பிடுங்கப்பட்டு ராணுவ ஆட்சி அமுல் நடத்தப்படுகிறதென்றால் அது நமக்குக் கவலை அளிக்கக் கூடியதுதான். இது ஒரு சின்ன விஷயமல்ல. நம்மோடு நேற்று வரை இருந்தவர்கள் பாகிஸ்தான் மக்கள். அவர்கள் பக்கம் நம் அனுதாபம் கொள்வது இயற்கையே. அவர்கள் நன்ருய் இருந்தால் நான் சந்தோஷப்படுவேன். அவர்களுக்குக் கஷ்டம் வந்தால் நான் துக்கப்படுவேன் என்றார்.

**பத்திரிகைகளின் போக்கு**

நாம் பாகிஸ்தான் பற்றி இவ்விதம் கவலைப்பட்டுக்கொண்டிருக்கும்போது நமது பத்திரிகைகள் வேறுவிதமாகக் கவலைப்படுகின்றன. அதாவது இந்தக்காரியம் (ராணுவச்சட்டம்) இந்தியாவிலும் நிகழுமா? இங்கேயும் யாராவது ஒரு ராணுவத்தலைவர் அல்லது சர்வாதிகாரி தோன்றுவாரா? என்றெல்லாம் கேள்விகளையெழுப்பி பொறுப்பற்று எழுதுகின்றன என்றார் நேரு.

**காங்கிரஸ்காரர்கள் மீது தாக்குதல்**

ஆவடியில் நிறைவேற்றப்பட்ட சோஷலிஸ வடிவசமுதாயக்குறிக்கோளை எப்போதும் காங்கிரஸ்காரர்கள் தங்கள் முன்னிருத்தி வைத்திருக்கவேண்டும் சிலகாங்கிரஸ்காரர்கள் காலையில் பேசும்போது மூன்றுவது திட்டத்திற்குப் பிறகு கொஞ்சம் ஓய்வு வேண்டும் என்று கூறினர். இப்படி நினைப்பவர்கள் காங்கிரஸில் இருப்பது நல்லதல்ல. அவர்கள் வெளியேறி விடுவது உத்தமம். ஏனென்றால் காங்கிரஸ் என்றும் ஓய்ந்திருக்கவோ மற்றவர்களை ஓய்வு எடுத்துக் கொள்ளவோ விட்டுப்போவதில்லை என்றார்.

**கேரளம் பற்றி**

கேரளம் பற்றி நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் மீது அவர் பேசுகையில், கேரளாவில் நடப்பது இந்தியா பூராவிலும் பரவலாக நடக்கும் என்று சிலர் எச்சரித்தனர். இன்றும்அப்படி நடக்கும் இப்படி நடக்கும் என்றெல்லாம் கூறினர். இப்படி யெல்லாம் வெறும் கற்பனை செய்வதை நான் விரும்பவில்லை என்றார்.

**காங்கிரசில் கோஷ்டிகள்**

காங்கிரசில் கோஷ்டிகள் இருப்பது பற்றி அல்குராய் சாஸ்திரி கண்டித்ததைக் குறிப்பிட்டு நேரு பேசுகையில், காங்கிரஸில்எப்போதுமே கோஷ்டிகள் இருந்திருக்கின்றன. காந்திஜி வருவதற்கு முன்னுல் கூட பலதரப்பட்ட கோஷ்டிகள் இருந்தன. அவர் வந்த பிறகும் கூட கோஷ்டிச் சண்டைகளும் தனிப்பட்ட சண்டைகளும் இருக்கத்தான் செய்தன. இது மனித இயல்பு. இது அரசியலிலும் பிரதிபலிக்கிறது. இப்படி கோஷ்டிகள்இருந்தாலும் காங்கிரசிலுள்ள ஒவ்வொருவரும் பெரிய விஷயங்களில் ஈடுபட்டுள்ளார்கள்.

இப்போதுள்ள பிரச்னை என்னவென்ருல், இந்தக் கோஷ்டிகள் ஏதாவது உயர்ந்த கொள்கை அடிப்படையில் இருக்கின்றனவா அல்லது சொந்த சுயநலம் காரணமாக இருக்கின்றனவா என்பதுதான். சொந்தக் கோஷ்டிகளாக இருந்தால் அவைகள் தொலைந்தொழியட்டும். அவற்றில் எனக்கு அக்கறை கிடையாது என்றார்.

பின்னர் அணு ஆயுத சோதனைகளை தடைசெய்வதுபற்றி ஆதரித்துப் பேசினர். (பி.டி.ஐ.)

## வேலைநிறுத்த நிலைமைகளை ஆராயத் தலைவர்கள் கூடுகின்றனர்

### பேச்சுவார்த்தைகள் மீண்டும் நடத்த சாத்தியக்கூறுகள் பற்றித் தகவல்

திருவனந்தபுரம், அக். 25—

மூன்று தோட்டப் பகுதிகளில் தொழிலாளர் தகராறுகளைச்சுமுகமாகத் தீர்க்க அடுத்த வாரத் தொடக்கத்தில் பேச்சுவார்த்தைகள் மீண்டும் தொடங்கப்படும் என்று நம்பத்தகுந்த வட்டாரங்களிலிருந்து செய்தி கிடைத்திருக்கிறது.

வேலைநிறுத்தம் ஒரு நாள் அடையாள வேலைநிறுத்தமாகப் போராட்டக் கமிட்டியார் பிரகடனப்படுத்தப் பட்டிருப்பது இந்த வட்டாரங்களில் இத்தகைய நம்பிக்கையை உறுதிப்படுத்துகிறதாம்.

வேலைநிறுத்தத்தை நடத்தும் தலைவர்கள் நாளை கோட்டயத்தில் சந்தித்து நிலைமை பற்றி ஆராய்வார்கள். பேச்சுவார்த்தைகள் மீண்டும் தொடங்கப்படுவதற்கான சாத்தியக்கூறுகள் பற்றிக் கேரள முதலமைச்சர் மத்திய உள்நாட்டுத் துறை அமைச்சர் பந்த்துக்கு இன்று கடிதம் எழுதியிருப்பதாகத் தெரிகிறது.

## லெபனுனிலிருந்து அமெரிக்கப் படைகள் வெளியேற்றம்

### இன்றுடன் பூர்த்தியானது

பெய்ரூட், அக். 25—

லெபனுனிலிருந்து அமெரிக்கத் துருப்புகளின் வெளியேற்றம் அநேகமாக இன்றுடன் முடிவடைந்துவிட்டது.

பெய்ரூட் துறைமுகத்திலிருந்து ஆறு கப்பல்களில் இன்று அமெரிக்கத் துருப்புகளின் கடைசி கோஷ்டி வெளியேறியது. வெளியேற்றத்துக்குக் குறிப்பிடப்பட்ட நாளிலிருந்து ஆறு நாட்கள் முன்னதாகவே இந்த வேலை முடிவடைந்திருக்கிறது.

இன்று இரவில் பத்து அமெரிக்க ராணுவ அதிகாரிகள் மட்டுமே லெபனுனில் இருப்பர். ஜூலை 15 லிருந்து அமெரிக்கத் துருப்புகள் தங்குவதற்கு வசதி செய்து கொடுத்த வகையில் லெபனுனுக்குத் தரவேண்டிய பணம் சம்பந்தமாக இவர்கள் இறுதி உடன்பாட்டுக்கு வருவர்.

## வட்டமேஜை மகாநாட்டில் கிரீஸ் கலந்துகொள்ளாது

ஏதென்ஸ், அக். 25—

சைப்ரஸ் பிரச்னைக்கு ஒரு தீர்வு காண்பதற்காக உத்தேசிக்கப்பட்டுள்ள வட்டமேஜை மகாநாட்டில் கிரேக்க அரசாங்கம் கலந்து கொள்ளாது என கிரேக்க அரசியல் வட்டாரங்களிலிருந்து செய்தி கிடைத்திருக்கிறது.

அவ்வாறு கலந்துகொண்டால் சைப்ரஸிலுள்ள கிரேக்கர்களுக்கு அது மிகவும் பாதகம் செய்ததாக முடியும் என்று கிரேக்க அரசாங்க அதிகாரி [illegible] கூறியிருக்கிறார்.

## மாணவர் போராட்டத்தை ஆதரித்து ஹர்த்தால்

நெல்லூர், அக். 25—

தனியார் நிர்வாகத்தின் கீழ் நடைபெற்று வரும் வி. ஆர். கல்லூரியைச் சேர்ந்த மாணவர்கள் கடந்த 25 தினங்களாகப் படிப்பு முடக்கப் போராட்டம் நடத்தி வருகின்றனர். இம் மாணவர்களை ஆதரித்து நகரிலுள்ள ஆயிரக்கணக்கான மாணவர் வேலைநிறுத்தம் செய்தனர். கடைகள், மார்க்கெட், ஹோட்டல்கள் யாவும் மூடப்பட்டன. பஸ் போக்குவரத்து நிறுத்தப்பட்டது. பூரண ஹர்த்தால்அனுஷ்டிக்கப்பட்டது.

ரயில்வே நிலயத்தில் மாணவர் திரண்டு ஆர்ப்பாட்டம் செய்து வண்டிகள் தாமதித்தே புறப்பட்டன.

இரண்டு மாணவர்கள் அக். 23ந் தேதி உண்ணு விரதம் துவக்கி இருக்கின்றனர்.

## ஒற்றுமையே உயிர்நாடி

### தொழிலாளி வர்க்க ஐக்கியத்திற்கு இடையருது உழைப்போம்

### 38-வது ஆண்டு விழாவை கோலாகலமாகக் கொண்டாடுக

#### அகில இந்தியத் தொழிற் சங்க காங்கிரஸ் அறிக்கை

புதுடெல்லி, அக். 25—

இந்த நாட்டில் முதன் முதலாக ஸ்தாபிக்கப்பெற்ற தொழிற் சங்க மத்திய ஸ்தாபனமான அகில இந்தியத் தொழிற் சங்க காங்கிரஸின் 38-வது வருடாந்திர விழா அக். 31-ந் தேதியன்று நடைபெற விருக்கிறது. இந்த தினத்தில் தொழிலாளி வர்க்க தொழிற் சங்க ஐக்கியத்தைக் கட்டி வளர்ப்பதற்கான பேரியக்கத்தைத் தீவிரமாகப் பலப்படுத்த வேண்டும் என்று கோரி அ. இ. தொ. சங்க காங்கிரஸின் செயற்குழு ஓர் அறிக்கை விடுத்துள்ளது. அதன் சுருக்கம் வருமாறு:

இந்த ஆண்டு விழா ஒரு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. நம் நாட்டிலுள்ள தொழிலாளி வர்க்கம் அனைத்திற்கும் இது ஒரு விழா நாள்.

கடந்த நாற்பதாண்டு காலமாக, எத்தனை சோதனைகள்! எத்தனை வேதனைகள்! முட்டுக் கட்டைகள்! மோதல்கள்! எத்தனை வெற்றிகள் தோல்விகள்! இதன் வரலாற்றிலே இடம் பெற்றுள்ளன. இன்று இந்த நாட்டிலுள்ள தொழிற்சங்கங்கள் யாவும் ஏதாவது ஒரு காலகட்டத்தில் அ. இ. தொ. சங்கக் காங்கிரஸின் ஓர் அங்கமாக விளங்கி, இயங்கி வந்துள்ளன. அதன் வாழ்வு தாழ்வுகளில் பங்குகொண்டிருக்கின்றன.

இந்த 38-வது ஆண்டு விழா நடைபெறும் கட்டத்தில் தொழிலாளிவர்க்கம் இந்த ஸ்தாபனத்தின் வீரபரம்பரைக்கு, தியாக பூர்வமான போராட்டங்களுக்கு இதன் மணிக்கொடியின்கீழ்நின்று உயிர்களை அர்ப்பணித்த வீரத் தியாகிகளுக்கு தொழிலாளி வர்க்கம் பெருமையுடன் அஞ்சலி செலுத்தும்.

**பிளவுக்குப் பொறுப்பு**

1947-ம் வருட முதல் அரசியல் அடிப்படையில் தொழிற்சங்க இயக்கம் மோசமான நிலையில் பிளவுற்றுக்கிடக்கிறது. ஆனால் இந்தப் பிளவுக்கு அ. இ. தொ. சங்கக் காங்கிரஸ் எக்காலத்திலும் பொறுப்பாக இருந்ததில்லை என்பது இங்கு தெட்டத் தெளிவாக குறிப்பிடவேண்டும்.

இந்திய தேசியக் காங்கிரஸ், சோஷலிஸ்ட் கட்சி இவற்றின் தலைவர்களே திட்டமிட்டு ஐக்கியத் தொழிற் சங்க இயக்கத்திலிருந்து வெட்டிக் கொண்டு வெளியேறினுர்கள். ஐ. என். டி. யூ. சி. ஹிந்த் மஸ்தூர் சபா என்ற போட்டி மத்திய சங்கங்களை நிறுவினுர்கள்.

**வர்க்கப் போராட்டம்**

வர்க்கப் போராட்ட நோக்கத்தில் உறுதியுடன் தொழிலாளி வர்க்க நலவுரிமைகளைச் சிறிதளவும் விட்டுக் கொடுக்காமல், முதலாளி வர்க்கத்தின் தாக்குதல்களை எதிர்த்து இடையருது போராடி வந்திருக்கிறது. 1948 முதல் 51 வரையில் பயங்கர அடக்கு முறைக்கு ஆளாகி வந்துள்ளது. ஆனால் இந்த அடக்குமுறைப் புயல்களை எல்லாம் சமாளித்து, எண்ணற்ற ஊழியர்கள் சித்ரவதைக்கு ஆளானபோதும், சட்ட விரோதமான நிலையில் சிக்க [illegible] இருந்தபோதும், சங்கங்கள் பல சிதறுண்டபோதும் அ. இ. தொ. சங்கக் காங்கிரஸ் [illegible] ஒடுக்க முடியவில்லை.

கடந்த [illegible] காட்சி. [illegible] தொழிலாளிகளும் [illegible] அ. இ. தொ. சங்கக் காங்கிரஸ் பலமடைந்து, பொதுஜன செல்வாக்குப் பெற்று இன்று நாட்டிலேயே முதன்மை பெற்றுத் திகழும் மத்திய ஸ்தாபனமாக கம்பீரமாகத்திகழ்கிறது பதினுன்கு லட்சம் உறுப்பினர்களுக்கு மேல் பிரதிநிதித்துவப் படுத்தும் ஸ்தாபனமாக உயர்ந்து ஐ என். டி. யு. சி.யின் ஜம்பத்திற்கு அறைகூவுகிறது.

ஐக்கியத்திற்காக இடையருது போராடிப் பணியாற்றியுள்ள இந்த ஸ்தாபனத்தின் தீரா உழைப்பின் விளைவாகவே இந்த நிலை ஏற்பட்டுள்ளது 1953 முதல் நாட்டில் நடைபெற்ற பிரதான தொழிலாளிவர்க்கப் போராட்டங்களில் பெரும்பாலான போராட்டங்களுக்குத் தலைமைதாங்கி வந்திருக்கிறது. சம்பள உயர்வு, போனஸ், உத்தியோகப் பாதுகாப்பு, தொழிற் சங்க உரிமைகள், ஆள்குறைப்பு, வேலை நிறுத்தத்திற்கு எதிர்ப்பு

(4-ம் பக்கம் பார்க்க)

## வடக்கன் பாதிரியாரின் போர்க்கோலம்

### கம்யூனிஸ எதிர்ப்பு முன்னணியின் நோக்கமும் செயல்முறைகளும்

#### பாதிரியார் விளக்கம் தருகிறர்

கள்ளிக்கோட்டை, அக். 25—

கம்யூனிச எதிர்ப்பு முன்னணியின் உடனடியான நோக்கம் கம்யூனிசத்திற்கெதிரான எல்லா ஜனநாயக சக்திகளின் ஐக்கிய அணியினை உருவாக்குவதுதான் என்றும் அவ்வாறு உருவாக்கப் படும் அணி, கேரளத்தில் வரவிருக்கும் முனிசிபாலிடிகள், பஞ்சாயத்துகள் ஆகியவற்றுக்கான தேர்தல்களில் போட்டியிடும் என்றும் ‘கம்யூனிச எதிர்ப்புத் தலைவர்’ வடக்கன் பாதிரியார் இன்று இங்கு கூறினுர்.

இந்தநோக்கத்துடன் வடக்கன் பாதிரியார் மலபாரின் பல பகுதிகளிலும் சுற்றுப் பிரயாணம் செய்து பல்வேறு அரசியல் கட்சித் தலைவர்களைச் சந்தித்து வருகிறர். அத்தகையதொரு ஐக்கியத்தின் தேவையை அவர்களிடம் விளக்கி வருகிறராம். தன்னுடைய அறைகூவலை மக்கள் ஏற்று நடப்பது கண்டு தான் மிகவும் மகிழ்ச்சியடைவதாகக் கூறியிருக்கிறர்.

இந்த முயற்சியின் மற்ருெரு நோக்கம், கம்யூனிஸ்ட்களையே ‘ஜனநாயகச் சிந்தனை வழிக்கு’த் திருப்புவதாக இருக்குமாம். இதற்காக ஆங்காங்கே வகுப்புகள் நடைபெறுகின்றனவாம். அந்த வகுப்புகளில் கம்யூனிஸ்ட் தொழிலாளர்களும் அனுதாபிகளும்கூட அனுமதிக்கப் படுகின்றனராம். இந்த கம்யூனிச எதிர்ப்பணிகளின் அறைகூவலை ஏற்று பல கம்யூனிஸ்ட்கள் கட்சியை விட்டே வெளியேறியிருக்கின்றனராம்.

இந்தப் பணியை விரிவு படுத்த 5 லட்சம் இளைஞர் கொண்ட தொண்டர்படை யொன்றையும் திரட்ட இந்தப் பாதிரியார் உத்தேசித்திருக்கிறராம்.

## ராணுவ ஆட்சி நாட்டை சின்னுபின்னப்படுத்தும்

### பாக். நிலைபற்றி ஜெயப்பிரகாஷ்

பாட்னு, அக். 25—

“பாகிஸ்தானில் ராணுவ ஆட்சி ஏற்பட்டதால் எதுவும் சாதிக்க முடியாது, ஒரு சில ராணுவத் தலைவர்கள் என்ன செய்ய முடியும்! அங்கு நடைபெற்றது ஒரு புரட்சியல்ல. அதனுல் ஏதாவது சாதிக்க முடியுமா என்பது குறித்து எனக்குச் சந்தேகமே” என்று இங்கு பேசிய ஜெயப்பிரகாஷ் நாராயணன் கூறினர்.

இந்தியாவிலும் ராணுவ ஆட்சி ஏற்படும் என்று பேசுவது வெட்டிப் பேச்சு என்ற அவர், இவ்வாறு பேசுபவர்கள் எவ்வித சேவையும் புரியாது, சகல தொல்லைகளுக்கும் சர்க்கார் மீது பழி போடுபவர்கள்தான் என்ருர்.

ராணுவ ஆட்சியினுல் ஏதாவது நலன் ஏற்படலாம் என்ற மோசம் யாருக்காவது இருக்குமானுல் அது தவறு. ராணுவ ஆட்சி நாட்டைச் சின்னுபின்னமாகத் துண்டாடிவிடும். எக்காரணங்கொண்டும் இந்த நிலையை அனுமதிக்க முடியாது என்ருர் அவர்.

ஹிந்தி சாகித்ய சம்மேளன பவனில் ஹிந்தி இலக்கிய கர்த்தாக்கள் கூட்டத்தில் பேசிய ஜெயப்பிரகாஷ், இந்திய மக்கள் சோர்ந்து உறங்கிக் கிடக்கிருர்கள் என்றும் அவர்களைத் தட்டி எழுப்பி விழிப்பூட்டும் முறையில் இலக்கியப் படையல்கள் தேவை எனவும் வலியுறுத்தினுர். இந்திய நாகரிகத்தின் சிறப்பான அம்சங்கள் அந்நியப் போக்குகளால் படிப்படியாக அமிழ்ந்து போகின்றன என்று எச்சரித்தார்.

## கேரளத்தில் தலையீட்டை தீவிரமாக்க முஸ்தீபா?

### காங்கிரஸ் தீர்மானம்பற்றி பூபேஷ் குப்தா கண்டனம்

கௌஹதி, அக். 25—

கேரளத்தைப் பற்றி அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி நிறைவேற்றியுள்ள தீர்மானம் கேரள ராஜ்யத்தில் மத்திய சர்க்கார் தலையீட்டைத் தீவிரமாக்கும் நோக்கத்தையே எடுத்துக் காட்டுகிறது என்று, இங்கு பேசிய ராஜ்யசபை கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் புபேஷ் குப்தா கூறினுர்.

கேரள சர்க்கார் மீது அவதூறுகளைச் சுமத்திக் கேவலப்படுத்துவதற்காகத் திட்டமிட்ட முயற்சிகள் தொடர்ந்து நடந்து வந்துள்ளன. அங்கு நிர்வாகம் நடத்துவதே கஷ்டமாக இருக்கத் தக்க விதத்தில் இது நடைபெற்று வந்திருக்கிறது என்று அவர் குறிப்பிட்டார்.

**ஜனநாயகத்தை ஒடுக்க**

பாகிஸ்தானில் ஏற்பட்டுள்ள ராணுவ ஆட்சி பற்றிக் குறிப்பிட்ட குப்தா, அதுஅந்த நாட்டில் ஜனநாயகத்தை ஒடுக்கவே எழுந்துள்ளது என்ருர். பாகிஸ்தானில் ராணுவ ஆட்சி நடப்பதால் இந்திய-பாகிஸ்தான் உறவுகளும், இரு நாடுகளுக்குமிடையே இன்னும் தீர்க்கப்படாமலிருக்கும் பிரச்னைகளும் மேலும் சிக்கலாகலாம் என்ருர்.

இந்தியாவிலும் ஜனநாயகத்திற்கு எதிரான நிர்ப்பந்தங்கள் வரலாம். எனவே அரசியல் கட்சி பேதமின்றி இந்த நாட்டில் ஜனநாயகத்தைப் பாதுகாப்பதற்காக ஒன்று சேரவேண்டும் என்று அவர் கேட்டுக்கொண்டார். (பி.டி.ஐ.)

## சர்வதேச கலாசார மத்தியஸ்தாபனம்

புதுடில்லி, அக். 25—

ஜப்பான் தலைநகரான டோக்கியோவில் இருப்பது போன்ற ஒரு சர்வதேச கலாசார மத்தியஸ்தாபனத்தைப் புதுடில்லியிலும் நிறுவுவது சம்பந்தமாக பாரத உப ஜனதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் விடுதியில் ஒரு பூர்வாங்கக் கூட்டம் நடைபெற்றது. எல்லா நாடுகளுடன் கலாசார உறவு, கலாசார கோஷ்டிகள் பரிமாற்றம், பட்டி மன்றம் முதலிய அம்சங்கள் இந்த அமைப்பினுல் ஏற்பாடு செய்யப்படும்.

### சுதந்திர அல்ஜீரிய சர்க்கார் அறிக்கை

கெய்ரோ, அக். 25—

அல்ஜீரியாவில் சுடுவதை நிறுத்துவதற்குப் பேச்சு வார்த்தைகள் நடத்துவது சம்பந்தமாக ஜெனரல் டிகால் வெளியிட்ட அறிக்கையை சுதந்திர அல்ஜீரிய சர்க்கார் நிராகரித்துவிட்டது. டிகாலின் அறிக்கை, அல்ஜீரிய விடுதலைப் படையினர் நிபந்தனையின்றி சரணடைய வேண்டுமென்று கோருவதாகவே இருக்கிறது என்றும் சுதந்திர அல்ஜீரிய சர்க்கார் தெரிவித்தது. ஆனால் அல்ஜீரிய பிரச்னைக்கு முழுமையான உண்மையான தீர்வு காண்பதற்கு சர்க்கார் தயார் என்றும் அது கூறியுள்ளது.

## பார்மோசா சீனருக்கு பாதுகாப்பு மந்திரி செய்தி

### “பகைமையைவிட்டு நண்பராவோம்”

ஹாங்காங், அக். 25—

“குறை இருந்தால் சொல்லுங்கள். அதை நீக்கிவிடுகிறோம். பகைமையை விட்டு நண்பராக மாற இதுவே தருணம்” என்று சீன பாதுகாப்பு மந்திரி ஒரு செய்தியை பார்மோசா மக்களுக்கு விடுத்திருக்கிறர்.

அச் செய்தியில் பாதுகாப்பு மந்திரி மேலும் குறிப்பிட்டிருப்பதாவது:— “உங்களில் பெரும்பாலோர் தேசபக்தர்கள். வெகு சிலரே அமெரிக்கர்களுக்கு அடிமைகளாக இருக்க விரும்புகின்றனர். கோமின்டாங்கிற்கும் கம்யூனிஸ்ட் கட்சிக்கு மிடையில் நெடுங்காலமாக இருந்துவரும் சச்சரவில் டல்லஸ் தலையிட்டு சூழ்ச்சி புரிகிறர். இதைச் செய், அதைச் செய் என்று கோமிண்டாங் சீனருக்கு ஆணையிட்டு வருகிறர். நீங்கள் அன்னியரை அதிகம் நம்பினுல் உங்கள் உரிமைகளும் அதிகாரமும் பறிபோய்விடும்.

## ரேஷனை நிறுத்தாதே!

### பொதுஜன சத்யாக்கிரஹம்

திருவனந்தபுரம், அக். 25—

முண்டக்காயத்தில் தோட்ட தொழிலாளருக்கு வழக்கம்போல கொடுக்கப்பட்டுவந்த ரேஷனை முதலாளிகள் நிறுத்திவிட்டனர்கள். இதைக் கண்டித்துச் செல்லாளர்கள் அனைவரும் சத்தியாக்கிரஹம் செய்து வருகிறர்கள்.

## குற்றம்புரிந்த போலீஸ் அதிகாரிகளைத் தண்டிப்போம்

### சட்ட மந்திரி கிருஷ்ணய்யரின் வாக்குறுதி

திருவனந்தபுரம், அக். 22—

அடிமாலிப் பிரயோகத்தில் [illegible] தோட்டத் தொழிலாளர்களுக்கு அனுதாபம் தெரிவிக்க நடத்தப்பட்ட கூட்டமொன்றில் கேரள சட்ட அமைச்சர் திரு. கிருஷ்ணய்யரால் அனுப்பி வைக்கப்பட்ட கடிதம் வாசித்துக் காண்பிக்கப்பட்டது. அக்கடிதத்தில், குற்றம் புரிந்த போலீஸ் அதிகாரிகளைச் சர்க்கார் தண்டிப்பார்கள் என்று மந்திரி வாக்குறுதி கொடுத்துள்ளார்.

உயிருக்கும், உடைமைக்கும் பாதுகாப்பளிப்பது என்பதுவே சர்க்காரின் கொள்கை யென்றும், வேலை நிறுத்தத்தை உடைப்பதற்குப் போலீசை உபயோகப் படுத்துவதற்குச் சர்க்கார் அனுமதிக்க மாட்டார்கள் என்றும் அவர் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். அத்துமீறி நடந்த போலீஸ் அதிகாரிகள்மீது புகார் செய்வதற்குப் பொதுமக்களுக்கு முழு சந்தர்ப்பமும் அளிக்கப்படும் என்றும் சட்ட மந்திரி வாக்குறுதியளித்தார்.

## ஜனநாயகத்திற்குப் புதைகுழியா

### புதுவைக் கமிஷனர் முடிவுக்கு வி. சுப்பையா கண்டனம்

#### புதுத் தேர்தல் நடத்த அறைகூவல்

புதுவை, அக். 25—

புதுவை சட்டசபையைக் கலைத்துவிடும் உத்தேசம் இருப்பதாக அரசியல் கட்சித் தலைவர்கள் கூட்டத்தில் புதுவைக் கமிஷனர் கூறினுர். குழப்பமான நிலை இருப்பதால் இவ்வாறு செய்யப் படுவதாகக் குறிப்பிட்டார்.

புதுவை ராஜ்ய சட்டசபை எதிர்க்கட்சித் தலைவர் வி சுப்பையா இந்த முடிவைக் கண்டித்து ஓர் அறிக்கை விடுத்துள்ளார்.

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளை மிகக் கேவலமான முறையில் அச்சுறுத்தும் நடவடிக்கை இது என்று அவர் கண்டித்துள்ளார். புதுத் தேர்தல்கள் நடத்தட்டும் என்று இந்திய சர்க்காருக்கு அறைகூவல் விடுத்துள்ளார்.

**போராடுவோம்**

மக்கள் முன்னணியைப் பொறுத்தவரையில், சர்க்காரின் ஜனநாயக விரோதப் போக்கை அம்பலப்படுத்தி, ஊழல்களை ஒழிக்கத் தொடர்ந்து போராடும் என்று அவர் அறிவிக்கிருர். காங்கிரஸால் ஒரு சர்க்கார் நிறுவ முடியவில்லை. காங்கிரசல்லாதார் ஒரு சர்க்காரை நிறுவமுடியும். ஆனுல் அதற்கு இடமளிப்பதற்கு மாருக மத்திய சர்க்கார் ஜனநாயகத்திற்கே புதைகுழி தோன்றுகிறது என்று அவர் குறிப்பிட்டுள்ளார்.

முன்னுள் காங்கிரஸ் மந்திரி சபை மீது எழுப்பப்பட்டிருந்த லஞ்ச ஊழல் அதிகார துர் உபயோகம் இவைபற்றி விசாரணை நடத்தவேண்டும் என்றும் அவர் வலியுறுத்தியுள்ளார்.

## மக்கள் சபை நவ. 17ல் கூடும்

புதுடெல்லி, அக். 25—

மக்கள் சபை நவம்பர் 17ந்தேதியன்று கூடும். டிச 19ந்தேதி வரையில் இந்தக் கூட்டம் நடைபெறும். இன்ஷியூரன்ஸ் நிறுவனம் பற்றி முந்திரா விவகார விசாரணை நடத்திய நீதிபதி விவியன் போஸ் சமர்ப்பித்துள்ள அறிக்கை இக்கூட்டத்தில் பிரதானமாக விவாதிக்கப்படும். அரசியல் கட்சிகளுக்கு [illegible] லதிபர்கள் நன்கொடையளி[illegible] பற்றிய விவாதமும் நடக்கும்.

# நச்சுப் பேச்சு, நல்ல பேச்சல்ல

## திரு. ஜெயப்பிரகாஷ் கருத்துக்கள் பற்றி விமர்சனம்

எம். ஆர். வெங்கட்ராமன்
செயலாளர்
(இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தமிழ்நாடு கமிட்டி.)



சென்னையில் திரு. ஜெயப்பிரகாஷ் நாராயணன் பல இடங்களில் இரண்டு நாட்களாய் பேசியிருக்கிறார். அவருடைய முதல் பிரசங்கம் மைலாப்பூர் ரனடே ஹாலில் நடந்தது. அதைப் பார்த்தாலே அவருடைய போக்கைப் புரிந்துகொள்ளப் போதுமென்று நினைக்கிறேன். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு அரிசி பதம்.

மேல் நாடுகளுக்குச் சென்று திரும்பிய பிறகு திரு. ஜெயப்பிரகாஷ் வெளியிட்டு வரும் கருத்துக்களைப் பற்றி, காங்கிரஸ் பத்திரிகையான "தினமணி" 21-10-58ல் ஒரு தலையங்கம் தீட்டியிருக்கிறது. நாட்டின் அவல நிலைமையை வர்ணித்தால் மட்டும் போதாதென்றும், "நிலைமைக்கான காரணங்களையும் ஆராய்ந்து தெளிந்து" கூறவேண்டுமென்றும், இத்தகைய "மனத் தெளிவு ஏற்பட்ட பிறகுதான் பரிகாரங்களைப் பற்றி சிந்திப்பது பொருத்தமாக இருக்கும்" என்றும், "திரு. ஜெயப்பிரகாசர் இதுவரை பேசியதிலிருந்து அவருடைய சிந்தனை எந்த திசையில் செல்கிறதென்று உறுதியாகக் கூற முடியவில்லை" என்றும், அத்தலையங்கம் குறிப்பிடுகிறது.

"சர்வம் குழப்பம் மயம் ஜகத்" என்ற மேற்கூறிய பிரதிபலிப்பை திரு. ஜெயப்பிரகாஷ் பிரசங்கங்கள் பலரிடம் உண்டுபண்ணியிருந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆனால் திரு. ஜெயப்பிரகாஷ் இன்றைய நிலைமைக்கான காரணங்களைக் கூறுமலில்லை. நெருக்கடி தீருவதற்கான அவரது ஆலோசனைகளையும் வலியுறுத்தாமலில்லை. இவற்றை உற்று நோக்கும்போதுதான் அவருடைய பேச்சுக்கள் எவ்வளவு விஷம் நிறைந்ததாகவும், நமது நாட்டின் ஜனநாயக வாழ்க்கைக்கே உலை வைப்பனவாகவு மிருக்கின்றன என்பது புலப்படும்.

"சுதந்திரம் கிடைத்த பிறகு... பெருந் தலைவர்களெல்லாம் சர்க்காரில் மந்திரிகளாக அமர்ந்து விட்டனர். இதனுல் சர்க்காரே எல்லாவற்றையும் செய்யும் என்ற மனப்பான்மையை மக்களிடம் வளர்த்துவிட்டனர்." (ஹிந்து பத்திரிகை 23-10-58)

இதுதான் நாட்டிலேற்பட்டுள்ள நெருக்கடிக்கு திரு. ஜெயப்பிரகாஷ் கூறும் முதற் காரணம். சீனதேசத்தின் பெரும் அரசியல் தலைவர்களெல்லோரும் சர்க்காரில் தானிருக்கிறார்கள். சோவியத் யூனியன் கம்யூனிஸ்டு கட்சியின் முதல் காரியதரிசி அந்த நாட்டின் பிரதம மந்திரியாகவும் பணியாற்றுகிறார். அங்கெல்லாம் இதனுல் எத்தகைய நெருக்கடியோ, உற்சாகக் குறைவோ மக்களிடம் ஏற்பட்டுள்ளதாகத் தெரியவில்லை. அதற்கு மாறாக அண்டைநாடான சீனதேசத்தில் எல்லையற்ற உற்பத்திப் பெருக்கும் அமெரிக்க ஆக்கிரமிப்பை 60 கோடி மக்களும் எதிர்த்து நிற்கும் பேராற்றலும் காணப்படுகின்றன.

எனவே தலைவர்கள் மந்திரிகளானார்கள் என்ற காரணம் நொண்டிச்சாக்கு மட்டுமல்ல, மக்கள் உண்மையான காரணத்தைப் புரிந்துகொள்ளாதிருக்க, திசை திருப்பிவிடும் ஆராய்ச்சி.

### சோர்வுக்கு காரணம் யார்?

இன்று காங்கிரஸ் அரசாங்கம் [illegible]கையாளும் கொள்கைகள் ஜன விரோதமானவை, அதனுல் [illegible]ன் மக்களிடம் அசாத்திய [illegible]வும் வெறுப்பும் ஏற்பட[illegible] என்று திரு ஜெயப்[illegible] கூறத் தயாராயில்லை. [illegible]திரையிட்டு மறைக்கவே [illegible]றார்.

[illegible] காரணங்களால், இங்[illegible] மக்கள் மரத்துப்போய், [illegible]ம்பித்து விட்டார்கள்." [illegible]ன காரணங்களால் என்று [illegible] ஜெயப்பிரகாஷ் கூறமாட்[illegible].

[illegible]வும் கேளுங்கள், "மக்க[illegible] ஒத்துழைப்பின்றி என்ன செய்தாலும் நாட்டில் அபிவிருத்தி காண முடியாதென்று ஒவ்வொரு மந்திரியும் உணருகிறார். கோடிக்கணக்கான ரூபாய்கள் செலவிட்டும், கிடைத்த பலன் மிகக் குறைவே. மக்களின் ஒத்துழைப்பின்றி ஒன்றும் செய்ய முடியாதென்று அதிகாரிகளும் கைகளை விரிக்கின்ற[illegible]"

[illegible] நாட்டிலேற்பட்டுள்ள நெருக்கடிக்கு திரு. ஜெயப்பிரகாஷ் கூறும் இரண்டாவது முக்கிய காரணம் இதுதான். 'மக்கள் அசையவில்லை, அசையமாட்டேன் என்கிறார்கள்!' என்பதே.

### நெருக்கடி யாரால்?

மக்கள் மீது இவ்வாறு பழியைப் போடும் திரு. ஜெயப்பிரகாஷ்—இதற்குக் காரணம் காங்கிரஸ் சர்க்காரின் ஜனநாயக விரோதக் கொள்கைகள்தான் என்று இந்த இடத்திலும் சொல்லத் தயாராயில்லை. ஏகாதிபத்திய சக்திகளோடு உறவாடிக் கொண்டும் அவர்களுக்கு சலுகைகள் அளித்துக் கொண்டும், ஏகபோக முதலாளிகள் கொள்ளையடிப்பதை அனுமதித்துக் கொண்டும், நிலப்பிரபுத்துவத்தை உறுதியாக ஒழிப்பதை ஒத்திப் போட்டுக்கொண்டும் வரும் கொள்கைகளை சர்க்கார் அனுசரித்து வரும்வரை நாட்டில் நெருக்கடி ஏன் ஏற்படாது? தொழிலாளிகளின் குறைந்தபட்சக் கோரிக்கைகளைக்கூட ஏற்காமல் காலங்கடத்திக்கொண்டும், விவசாயிகள் ஆயிரக்கணக்கில் நிலத்திலிருந்து வெளியேற்றப்படும்போது சும்மா பார்த்துக் கொண்டும், விலைவாசி ஏற்றத்தைக் கட்டுப்படுத்தாமல் வேலையில்லாதோர் பட்டாளத்தை தினே தினே பெருக்கிக் கொண்டும் வரும் கொள்கைகள் மக்களின் உற்சாகத்தையா கிளப்பும்? எதிர்ப்பைத்தானே திரட்டும்? இந்த உண்மையை மக்களுக்குக் கூற விரும்பவில்லை திரு. ஜெயப்பிரகாஷ்.

### குழப்பமடைந்தது யார்? மக்களா? இவரா?

மக்கள் அசைவற்றிருக்கிறார்களென்று இவர் கூறும்போது இவருடைய குழப்பத்தையும் சோர்வையுமே இவர் மக்களின் குணுதிசயங்களாக வர்ணிக்கிறாரோ என்று நினைக்கத் தோன்றுகிறது. மொழிவழி மாகாணத்திற்காக குஜராத் மக்கள் போராடி வருகிறார்கள். துப்பாக்கி ரவைகளுக்கஞ்சாது ஜாம்ஷெட்பூர் தொழிலாளிகளும் சென்னை துறைமுகத் தொழிலாளிகளும் போர்க்கொடி உயர்த்தியது சமீபகால சரித்திரம். நமது மாகாணத்திலேயே திருச்சி நகரின் 20000 பீடித் தொழிலாளிகள் வீரம் மிக்க போராட்டத்தில் நகரையே அசைத்து விட்டனர்; ரெயில்வே லேபர் யூனியன் போராட்டம் மாகாணமெங்கும் பேரெழுச்சியைக் காட்டியது; காளீஸ்வராமில் தொழிலாளர்களின் அறப்போர் அனைவரையும் வியக்க வைத்தது; மேட்டுப்பாளையம் பாக்குத் தொழிலாளர்கள் அடக்குமுறைக்கஞ்சாது நின்றார்கள்; ஹிந்து பத்திரிகைத் தொழிலாளர்கள் முதன் முறையாகப் போராட முன்வந்ததும் சமீப காலத்தில்தான். 1½லட்சம் தோட்டத் தொழிலாளர்கள் பிரிட்டிஷ் முதலாளிகளின் பிடிவாதச் சுரண்டலை எதிர்த்து ஸ்ட்ரைக் செய்கிறார்கள். எண்ணற்ற கிராமங்களில் விவசாயிகளும், நகரங்களில் எல்லா உழைப்பாளிகளும், ஜனநாயக உரிமைகளுக்காகப் போராடி நிலைமையை மாற்றி வருகின்றனர். இதையெல்லாம் திரு. ஜெயப்பிரகாஷ் அறியாமலில்லை. ஆனால் மக்கள் தங்களுடைய சக்தியை நம்பி முன் வருவது அவருக்குப்பிடிக்கவில்லை. அவர்கள் சும்மா இருப்பதாக நிலைமையை வர்ணிக்கிறார்.

இனி நிலைமையை சமாளிக்க திரு. ஜெயப்பிரகாஷ் கூறும் ஆலோசனையையும் பார்க்கலாம்.

"கிராமத்திற்கு ஒரு ஊழியராக கிராம மக்களிடமே வேலை செய்து வழிகாட்டிக் கொண்டிருக்கும் 6 லட்சம் ஊழியர்களை காந்திஜீ விரும்பினார். இத்தகைய தன்னலமற்ற ஊழியர் படையை சிருஷ்டித்துவிட்டால் இன்று மக்களைப் பீடித்திருக்கும் ஸ்தம்பிப்பை அகற்றிவிடலாம்."

நல்ல யோசனைதான். சாமர்த்தியமாக காந்திஜீயின் பெயரையும் திரு. ஜெயப்பிரகாஷ் சேர்த்துக் கொண்டார்.

ஆனால் இதில் புதிதாக என்ன இருக்கிறதென்று தான் நமக்குப் புரியவில்லை. காங்கிரஸ் கட்சியினர் ஓயாது பேசிவரும் "மக்கள் தொடர்பு" மந்திரம்தான் இது.

### சேவை எங்கே?

நாடுபூராவும் "சமூகநல அபிவிருத்தி" "தேசிய விஸ்தரிப்பு" திட்டங்களில் காங்கிரஸ்காரர்கள் எண்ணற்ற "கிராம சேவகர்"களை இன்று இயக்கி வருகிறார்களே. நாட்டில் இதனுல் உற்சாகமும் விவசாய அபிவிருத்தியுமா ஏற்பட்டிருக்கிறது? இதற்கான ஒரு ஸ்தாபனமாக "பாரத் சேவக் சமாஜ்" என்று ஏராளமான செலவில் தொண்டர் படையையும் காங்கிரஸ் ஆட்சி நிறுவியுள்ளதே. நேற்றுத்தானே மத்திய சர்க்கார் மந்திரி குல்ஜாரிலால் நந்தா இந்த சமாஜ் தொண்டர்களின் அரிய சேவைக்குப் புகழ்மாலை பாடியிருக்கிறார்.

தன்னலமற்ற தொண்டர்கள் காங்கிரஸ் கட்சிக்கு இன்று ஏன் வரமறுக்கிறார்கள்? திரு. ஜெயப்பிரகாஷின் மாற்றுத் திட்டம் என்ன? மக்களை ஆகர்ஷிக்கக் கூடிய ஜனநாயகத் திட்டம் ஏதாவது அவரிடம் உண்டா? இதைப் பற்றி அவர் பேசுவதில்லை. தன்னலமற்ற கொள்கையிருந்தால் தானே தன்னலமற்ற ஊழியர்களை மக்கள் சேவைக்கு ஆகர்ஷிக்க முடியும்.

### திசை திருப்பாதீர்?

"மனப்புரட்சி" மக்களிடம் ஏற்படுத்தவேண்டுமென்பது திரு. ஜெயப்பிரகாஷ் வலியுறுத்தும் இன்னொரு சிறந்த ஆலோசனை. இது பழைய சரக்குதான். ஆனால் இன்றைய ஆட்சியாளர்களின் பிற்போக்கை வன்மையாக கண்டித்து மாற்றுவதற்கு நடவடிக்கை எடுக்க மக்களைத் திரட்டாமல், மக்களின் கவனத்தை வேறு திசையில் திருப்பிவிடுவதற்கு அடிக்கடி பயன்படும் சரக்கு.

இந்தத் தன்னலமற்ற தொண்டர்கள் எப்படி வருவார்கள், அவர்கள் என்ன திட்டத்தை மக்களிடம் வைத்து "மனப் புரட்சி" ஏற்படுத்துவார்களென்று கூருதது மட்டுமல்ல, இந்த விஷயத்தில் திரு. ஜெயப்பிரகாஷுக்கே உள்ள அவநம்பிக்கையை அவரது பிரசங்கமே காட்டுகிறது.

"கடந்த 8 வருடங்களில் விநோபாஜீ 5000 நிர்மாண ஊழியர்களைத் தான் திரட்ட முடிந்திருக்கிறது. அசைவுக்கவசியமான மனமாறுதலை இது செய்யமுடியவில்லை" என்று கூறிவிட்டு, இஸ்ரேல் நாட்டுதலைவர் பென்குரியன் "கடந்த 8 வருடங்களில் இந்தியாவில் 5000 நிர்மாண ஊழியர்களைத் தான் திரட்ட முடிந்ததென்ற செய்தி கேட்டு அதிர்ச்சி அடைந்தார்" என்று கூறுகிறார். —("ஹிந்து" 23-10-58)

சர்வோதயத்தை, சர்வ ரோக நிவாரணியாக விடாப்பிடியாக உபதேசித்துவந்த திரு. ஜெயப்பிரகாஷ் இன்று விநோபாஜியின் இயக்கமே போதிய பலனளிக்கவில்லையென்றும் கூறுகிறார்.

பண்டித நேருவும் ராஜன் பாபுவும் பதவியைத் துறந்துவிட்டு விநோபாஜியுடன் கலந்து 'மனப்புரட்சி' இயக்கத்தை மக்களிடம் மேற்கொள்ள முன்வரவேண்டுமென்று ஆலோசனை கூறுகிறார் திரு. ஜெயப்பிரகாஷ். மேலும் இதற்கு விமர்சனம் தேவையில்லை.

### ஏகாதிபத்தியங்களின் சோஷலிஸம்

"ஜனநாயக சோஷலிசம்" தனது குறிக்கோளென்று பிரகடனப் படுத்தியிருக்கிறார் திரு. ஜெயப்பிரகாஷ். ஆனால் பிரிட்டன், மேற்கு ஜெர்மனி, பிரான்ஸ் முதலிய தேசங்களில் ஜனநாயக சோஷலிசம் வெற்றி கண்டிருக்கிறதென்று அதே பிரசங்கத்தில் புகழ்வதிலிருந்து இவருடைய 'சோஷலிசம்' முதலாளித்துவ சமுதாய அமைப்பை ஒன்றும் செய்துவிடாதென்பது தெளிவு. இந்த நாட்டிலுள்ள ஏகபோக முதலாளிகளின் சுரண்டலைப்பற்றியோ அன்னிய முதலீடுகளைப்பற்றியோ அவர் மௌனம் சாதிப்பதை இதிலிருந்தும் புரிந்துகொள்ள முடியும். ஏற்கனவே "ஆவடி சோஷலிசம்" நமக்குத் தெரியும். சொல்லில் சோஷலிசம்; செயலில் முதலாளித்துவ வர்க்க சேவைதான் அது என்று நாட்டு நிகழ்ச்சிகள் நிரூபித்து வருகின்றன. 'ஜனநாயகம்' 'சோஷலிசம்' என்ற வார்த்தைகளை உச்சரித்துவிட்டு மக்களை ஏமாற்றிவந்த காலம் மலையேறி வருகிறது.

கோகலே மண்டபத்தில் செய்த பிரசங்கத்தில் போலந்திற்குப் பண உதவி செய்ய அமெரிக்க ராஜாங்க மந்திரி டல்லஸ் விரைந்து செல்லாதது பெரிய தவறென்று கூறினார். சர்வகலாசாலையில் செய்த பிரசங்கத்தில் இந்த நாட்டிற்கு 'சட்ட சபை ஜனநாயகம்' ஏற்றதல்ல என்றார். அமெரிக்க டாலர் உதவி இவருக்கு நல்லதாகவே படுகிறது. நமது நாட்டில் சட்ட சபைகளைக் கலைத்துவிட்டு சில தலைவர்களின் சர்வாதிகார ஆட்சியே இவருக்குப் பிடித்தமாயிருக்குமென்று தோன்றுகிறது

வேண்டுமென்றே விஷயங்களைத் திரித்துக் கூறவும் திரு. ஜெயப்பிரகாஷ் இன்று முனைந்துவிட்டார். எப்படியாவது மக்களைக் குழப்பியாவது வைக்கலாமென்ற எண்ணமோ என்னவோ?

இதோ சில உதாரணங்கள்:

"ஐரோப்பிய நாடுகள் தனியார் தொழில்துறை முயற்சியினுலேயே உருவாக்கப்பட்டன. தனியார் தொழில்துறை முயற்சியென்றால் முதலாளித்துவத்தை நான் குறிப்பிடவில்லை. ஆனால் முதலாளித்துவமும் இதில் அடங்கும். நிதி நிறுவனங்கள், வியாபார ஸ்தாபனங்கள், வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலுமுள்ள இதர முயற்சிகளும் இதில் அடங்கும். அங்குள்ள சர்க்கார்களுக்கு இதில் மிகக் குறைந்த பங்கே உண்டு."

### இங்கு அது பலிக்காது

வார்த்தை ஜாலத்தைத் தவிர விஞ்ஞானத்தை இதில் காண முடியாது. இவர் கூறும் "ஐரோப்பிய நாடு"களில் தொழிலாளி வர்க்கம் அரசு புரியும் போலந்து, ஹங்கேரி, பல்கேரியா, செக்கோஸ்லோவாக்கியா, அல்பேனியா, ரஷ்யா போன்ற சோஷலிஸ்ட் நாடுகளுக்கு இடமில்லையென்றே கருதுகிறேன் ஏனெனில் அங்கு முதலாளித்துவம் அகற்றப்பட்டு மக்கள் ஆட்சியில் நாட்டின் அபிவிருத்தி தங்கு தடையின்றி நடைபெறுகிறது.

முதலாளித்துவ சமுதாய அமைப்பில் முதலாளித்துவ முறையில்தான் யாரும் உற்பத்தி செய்ய அனுமதிக்கப்படுவரென்ற உண்மையை மறைக்க, முதலாளித்துவத்தோடு இதர சில முறைகளும் இருப்பதுபோல நிதி நிறுவனங்கள், வியாபார ஸ்தாபனங்கள் என்றெல்லாம் பட்டியலை நீட்டுகிறார். முதலாளித்துவம் ஆட்சி புரியும் நாடுகளில் முதலாளிகளுக்குச் சாதகமானவர்களே அரசாங்கத்திலிருப்பார்கள், முதலாளிகளுக்கு அவசியமான சட்ட திட்டங்களே அமுலாக்கப்படுமென்ற உண்மையையும் திரு ஜெயப்பிரகாஷ் மறைக்கப் பார்க்கிறார். அரசாங்கம் யார் கையில், முதலாளி வர்க்கத்தின் கையிலா, தொழிலாளி வர்க்கத்தின் கையிலா, என்ற கேந்திரமான பிரச்சினையில் மக்கள் தெளிவு பெற்று முன்னேறுதவாறு, சர்க்காரில் யாரிருந்தால் என்ன என்ற போக்கை சிருஷ்டித்து, முதலாளி வர்க்கமே ஆட்சி பீடத்திலிருப்பதற்கு வழி வகை செய்யும், திரு. ஜெயப்பிரகாஷ் பிரசங்கம்.

### சீனு மீது அவதூறு

சைனு தேசத்தைப் பற்றி அவர் போட்டிருக்கிற போடு முழுப் பூசணிக்காயை சோற்றில் மறைப்பதாயிருக்கிறது. சைனுவில் இரண்டு வருடங்களுக்குள் எத்தகைய நிர்ப்பந்தமுமின்றி 30 லட்சம் கூட்டுறவு சொசைட்டிகள் ஏற்பட்டுள்ளன என்பதை ஏற்றுக்கொண்டு அவர் கூறுகிறார்:—

"ஆனுல் சீன சர்க்கார் கூட்டுறவு சங்கங்களின் மூலம்தான் விளைச்சலை விற்க முடியுமென்று சட்டமியற்றினார்கள். இதனுல் ஒவ்வொரு விவசாயியும் கூட்டுறவு சங்கங்களில் சேரும்படி நிர்ப்பந்திக்கப்பட்டனர். சென்னை காங்கிரஸ் சர்க்கார் இவ்வாறு சட்டம் இயற்றினால் அடுத்த தேர்தலில் தோற்றுப் போகும்."

சைனுவில் நிலப்பிரபுக்கள் உறுதியாகக் கட்டுப்படுத்தப்பட்டதும், விவசாயிகளுக்கு நிலம் வழங்கப்பட்டதும் இவருக்குத் தெரியாததல்ல. நிலம்பெற்ற விவசாயிகள்தான் பிறகு கூட்டுறவு சங்கங்களிலும் சேர்ந்தார்கள். அவர்களுக்கு சகல விதத்திலும் உதவி செய்தும், சர்க்காரே கூட்டுறவு சங்கங்களை நடத்திக் காட்டியும், தேசவியாபகமான, பிரம்மாண்டமான விளக்கப் பிரசாரத்தின்மூலம் கூட்டுறவு இயக்கத்தின் பயனை நிலச்சொந்தக்காரர்களாய் விட்ட விவசாயிகள் தேர்ந்து, தெளிந்துகொண்டு இஷ்டபூர்வமாக கோடிக்கணக்கில் கூட்டுறவு இயக்கத்தில் சேர்ந்ததும் வேண்டுமென்றே இந்திய மக்களிடமிருந்து திரு. ஜெயப்பிரகாஷினுல் மறைக்கப்படுகின்றன. நிலப்பிரபுக்களுக்கு இப்படி வக்காலத்து வாங்கவேண்டிய அவசியமில்லை, சைனு தேசத்தின் மகத்தான ஜனநாயக, சோஷலிச வளர்ச்சியையும் திரித்துக்கூறி நிந்திக்கவேண்டியதில்லை.

### தலையிடுவது யார்?

இறுதியாக திரு. ஜெயப்பிரகாஷின் கண்மூடித்தனமான கம்யூனிஸ்ட் எதிர்ப்பையும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

"சர்க்கார் அதிகாரிகள் யாருக்கு வேண்டுமானுலும் வோட் செய்யலாம், ஆனால் அரசியல் ஸ்தாபனங்களில் சேரக்கூடாது என்பது ஜனநாயகத்தின் அடிப்படைக் கொள்கை. கேரளத்தில் இந்தக் கொள்கையைத்தான் திரு. ஈ.எம்.எஸ். நம்பூத்திரிபாத் தகர்க்க முயற்சிக்கிறார்.....ரகசியமாகவும் தனிப்பட்ட முறையிலும் போலீஸ் அதிகாரிகாரிகள்கூட கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர்களாகும்படி வற்புறுத்தப்படுகிறார்களென்று அறிகிறேன். போலீஸ் அதிகாரிகளும், ஜட்ஜுகளும், மாஜிஸ்ட்ரேட்டுகளும், முன்சிப்புகளும் கம்யூனிஸ்டு கட்சி அங்கத்தினர்களாய்விட்டால் ஜனநாயகம் என்ன ஆவது?"

இது ஆதாரமற்ற பச்சைப் பொய் என்பதுமட்டுமல்ல. காங்கிரஸ் தலைவரும் முன்னுள் கேரள முதலமைச்சருமான திரு. பனம்பள்ளி கோவிந்தமேனன் போன்றவர்கள்தான் தங்களுடைய நடவடிக்கைகள், பேச்சுகள் மூலம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட கம்யூனிஸ்டு சர்க்காருக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டாமென்று சர்க்கார் அதிகாரிகளை நிர்ப்பந்திக்கிறார்களென்ற பகிரங்கமானச் செய்தி நாடெங்கும் அறிவிக்கப்பட்டுள்ளது.

திரு. ஜெயப்பிரகாஷ், "ஜனநாயக சோஷலிச"க் கூட்டணியில் கம்யூனிஸ்டு கட்சிக்கு இடமில்லையென்று தெளிவுபடுத்தினார். கம்யூனிஸ்டு கட்சிக்கு ஜனநாயகத்தில் நம்பிக்கையில்லையாம். கம்யூனிஸ்டு எதிர்ப்புக்கு அணிதிரட்டுவதே திரு. ஜெயப்பிரகாஷ் இப்போது ஏற்றுக் கொண்டுள்ள பணி.

### இனம் இனத்தோடே

காங்கிரஸ் ஆட்சியின் திட்டங்களுக்கு மாற்றுத் திட்டமாக மக்களுக்குகந்த ஜனநாயக ஆலோசனைகளை கம்யூனிஸ்டு கட்சிதான் உறுதியாக முன்வைத்து வருகிறதென்ற மலைபோன்ற உண்மையை திரு. ஜெயப்பிரகாஷ் உதாசீனம் செய்கிறார். கேரளத்தில் ஆட்சிபீடத்திலமர்த்தியும் இந்தியா முழுவதும் 1½ கோடி வோட்டுகள் அளித்தும், கம்யூனிஸ்டு கட்சிக்கு ஆதரவு காட்டும் மக்களை அவமதிக்கிறார் திரு. ஜெயப்பிரகாஷ். நாட்டின் ஒரு பிரதான அரசியல் சக்தியை அறவே ஒழித்துக்கட்டலாமென்று கனவு காண்கிறார் திரு. ஜெயப்பிரகாஷ். பிற்போக்கு சக்திகள் திரு. ஜெயப்பிரகாஷுக்கு ஆதரவு காட்ட முன்வந்தால் ஆச்சரியப்பட வேண்டுமா?

கம்யூனிஸ்ட் எதிர்ப்பைப் பிரதான கொள்கையாக ஏற்றுக்கொண்டுள்ள திரு. ஜெயப்பிரகாஷ் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் கடனை ஆதரித்துத் தாங்கிப் பேசுவதில் ஆச்சரியமென்ன? ரஷ்யா, சைனு போன்ற சோஷலிச நாடுகளில் ஜனநாயகமில்லையென்று ஏன் பேசமாட்டார்? பூர்ஷுவாக்களையும் நிலப்பிரபுக்களையும் பிரதிநிதித்வப்படுத்தும் காங்கிரஸ் சர்க்காரின் ஜனவிரோதக் கொள்கைகளை எதற்காக எதிர்ப்பார்?

### துறவியின் பதவிவேட்டை

அரசியலிலிருந்து விலகியதாகக் கூறியவர்—பிற்போக்கு அரசியலின் முன்னணிப் பாத்திரத்திற்கு முன்வருகிறாரா என்று கேட்கத் தோன்றுகிறது. "நேருவை சந்தித்தார், மீண்டும் சந்திப்பார்" என்றும், "தனிப்பட்ட முறையில் திரு. ஜெயப்பிரகாஷ், ஆசார்ய கிருபாளினி, அசோக் மேத்தா காங்கிரஸ் சர்க்காரில் மந்திரிகளாக சேருவதை காங்கிரஸ்காரர்கள் வரவேற்பார்களென்றும்" பத்திரிகைகளில் வெளிவந்துள்ள செய்திகள், திரைமறைவில் என்ன நடக்கிறதென்று கேட்க நிச்சயம் மக்களைத் தூண்டுகிறது.

எந்தச் சூழ்நிலையில் திரு. ஜெயப்பிரகாஷ் இந்தப் பிரசங்க மாரியில் இறங்கியிருக்கிறாரென்பதும் கவனிக்கத்தக்கது.

உலகம்—சோஷலிச சமுதாயத்திற்கு மாறிக்கொண்டிருக்கிறது. சோஷலிச நாடுகள்—கம்யூனிஸ்டு கட்சிகள் கூறும் வழியில்—நாளுக்குநாள் வன்மைபெற்று உலக மக்களை எங்கும் ஆகர்ஷித்து வருகின்றன. முதலாளித்துவ உலகம் சுருங்கி வருகிறது. நெருக்கடியின் மிகுதியினுல்—முதலாளித்துவ நாடுகளில் இப்போதுள்ள ஜனநாயக உரிமைகளுக்கே வேட்டுவைக்கப்படுகிறது. பிரான்சில் டிகாலின் சர்வாதிகாரம், பாகிஸ்தானில் ராணுவ ஆட்சி போன்ற முறைகளில் முதலாளி வர்க்கம் மக்களின் முன்னேற்றத்தைத் தடுக்க முயல்கிறது. ஜனநாயக உரிமைகளை மறுக்கிறது. கம்யூனிஸ்டு எதிர்ப்பில் அமெரிக்க ஏகாதிபத்தியம் முன்னணிப்பாத்திரம் வகிக்கிறது. கம்யூனிஸ்டு எதிர்ப்பு சக்திகளை ஒவ்வொரு நாட்டிலும் ஊக்குவிக்கிறது.

இந்தியாவிலும் கம்யூனிஸ்டு கட்சி முக்கிய அரசியல் சக்தியாகவும், மக்களின் உறுதுணைவனுகவும், ஜனநாயகத்தின் பாதுகாவலனுகவும் வளர்ந்து வருவது முதலாளி வர்க்கத்திற்கு திகிலைக் கொடுத்துள்ளது. கேரளத்தில் மக்கள் வோட்டுப்போட்டு கம்யூனிஸ்டு ஆட்சியை ஏற்படுத்திவிட்டார்கள். வேறு சில மாகாணங்களிலும் இவ்வாறு ஏற்பட்டுவிட்டால் என்ன செய்வது? அமிர்தசரஸ் கம்யூனிஸ்ட் மகாநாட்டின் தீர்மானங்கள் இந்திய மக்களைப் பெரிதும் ஆகர்ஷித்து மக்களிடம் கம்யூனிஸ்ட் செல்வாக்கை உயர்த்தியுள்ளன. ஜனநாயகத்திற்கும் சோஷலிசத்திற்கும் மக்கள் அணியில் நின்று உறுதியாகப் போராடும் முக்கிய அரசியல் சக்தியாக கம்யூனிஸ்டு கட்சி வளர்ந்து வருவதை ஆளும் வர்க்கங்கள் பார்க்கின்றன, பீதியடைகின்றன. கம்யூனிச இயக்கம் வளராமலிருக்க எதையும் செய்ய விரும்புகின்றன.

இந்த நிலைமையில்தான் திரு. ஜெயப்பிரகாஷ் டிகால் தேர்வுக்குப் பிறகு பிரான்ஸின் சுபீட்சத்தைப்புகழ்கிறார். சட்டசபைகள் நம் நாட்டுக்கு உதவாதென்கிறார். மக்கள் சீனுவை நிந்திக்கிறார். அமெரிக்க டாலர் உதவியை ஆதரிக்கிறார். கேரள சர்க்காரைத் தாக்குகிறார். கம்யூனிஸ்ட் எதிர்ப்பு விஷத்தைக் கக்குகிறார். மக்கள் முன்வந்து நிலைமையை மாற்றுமலிருக்க "ஜனநாயக சோஷலிசம்" என்ற போர்வையில் என்னென்னவோபேசி திசை திருப்பிவிட முயற்சிக்கிறார்.

திரு. ஜெயப்பிரகாஷ் வெளியிடும் கருத்துக்கள் குழப்பமானவை என்றால் மட்டும் போதாது. ஜனநாயகத்திற்கே உலைவைக்கும் பிரசாரம் என்ற முறையில் மக்களால் உறுதியாக நிராகரிக்கப்படவேண்டும்.

# வேலைநிறுத்தமும் போலீஸ் நடத்தையும்

[ஜீவா]



கண்ணன் தேவன் வெள்ளை நிர்வாகத்திற்கும் போலீஸ் அதிகாரிகளுக்கும் நெடுகலும் இருந்துவந்திருக்கிற உறவு, காங்கிரஸ் தலைமைக்கும் போலீஸ் அதிகாரிகளுக்கும் உள்ள உறவு, மத்திய அரசாங்கத் தலைவர்களும் காங்கிரஸ் தலைவர்களும் கேரளத்திலுள்ள அராஜக சக்திகளுக்குத் தூபம் போட்டு வந்திருக்கும் தன்மை—ஆகியவைகளை எல்லாம் கவனத்தில் வைத்துக்கொண்டால்தான், இன்று நடைபெறும் வேலைநிறுத்தத்தையும் அதில் போலீஸ் பங்கையும் சரியாக மதிப்பிடமுடியும்.

வேலைநிறுத்தம் மிக அமைதியாகவும் கட்டுப்பாடாகவும் நடைபெறுகிறது என்பதே எதார்த்தம். சில அசம்பாவிதங்கள் நடந்திருக்கின்றன என்பது மெய். ஆனுல் 35 ஆயிரம் தொழிலாளர்களை சம்பந்தப்பட்டது இந்த வேலைநிறுத்தம் என்பதையும் அது மிக விரிவான மலைப்பிரதேசத்தில் நடைபெறுகிறதென்பதையும், கணக்கில் எடுத்துப் பார்த்தால்தான், நடந்திருக்கிற அசம்பாவிதங்கள் ஒன்றுமில்லை என்று சொல்லத்தக்க அளவு என்பது தெரியவரும்.

துப்பாக்கிப் பிரயோகம் மிக மிக வருந்தத்தக்கதுதான். இந்தத் துரதிர்ஷ்டம் கம்யூனிஸ்டு ஆட்சியின் பெருமைக்கு இழுக்குதான்; சந்தேகமில்லை. கேரளத்தின் ஆட்சியாளர்களும் கம்யூனிஸ்டுக் கட்சித் தலைவர்களும் இந்தக் குறையை ஒரே குரலில் ஒப்புக்கொள்கிறார்கள்.

கம்யூனிஸ்டு மந்திரிசபை தனது ஆட்சியில் துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது என்ற அளவிலுள்ள பொறுப்பைத் தட்டிக்கழிக்க விரும்பவில்லை. ஆயினும் உண்மையில், தொழிலாளிகளைச் சாகடித்த படுகாயப் படுத்திய துப்பாக்கிப் பிரயோகத்திற்கு யார் பொறுப்பாளி?

வெள்ளை நிர்வாகமும், லஞ்சப் பேய்க்கு இரையாகிய போலீஸ் அதிகாரிகளும் இணைந்து நின்று செய்த சதியின் விளைவே இந்தத் துப்பாக்கிப் பிரயோகம் என்பது நமது துணிவான கருத்து. ஏன்?

இந்த வேலை நிறுத்தத்தில் போலீஸ் நடந்துகொண்ட விதம் வேறு. கம்யூனிஸ்டு ஆட்சி ஏற்படு முன் நடந்துகொண்ட பழைய முறையிலேயே இதிலும் நடந்துகொண்டார்கள். சில பிரதேசங்களில், போலீசார் தோட்டங்களினுள் புகுந்து தொழிலாளர்களை பலவந்தப்படுத்தி வேலைக்கு அனுப்பியிருக்கிறார்கள் என்று தெரியவருகிறது. போலீஸ் அதிகாரிகள் வேலைநிறுத்தக்காரர்களை உருட்டி மிரட்டி இருக்கிறார்கள் என்று புகார்கள்கிடைத்திருக்கின்றன. இவைகளெல்லாம் கேரள அரசாங்கத்தின் பிரகடனப்படுத்தப்பட்டுள்ளகொள்கைக்குவிரோதம் என்பது தெட்டத்தெளிவு. வேலை நிறுத்தத்தை உடைப்பது போலீசார் வேலையல்ல. அவர்களுக்குச் சட்டையும் சம்பளமும் சர்க்கார் கொடுப்பது அதற்காக அல்ல. வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களை பலாத்காரமாக வேலைக்கனுப்புவதும் போலீசாருடைய வேலையல்ல. உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு அளிக்கவே அவர்கள் அங்கு அனுப்பப்பட்டிருக்கிறார்கள்.

போலீசார் இந்த வேலை நிறுத்தத்தில் துப்பாக்கியை இஷ்டம்போல் நீட்டியிருக்கிறார்கள்; குண்டாந்தடியை மனம்போன போக்கில் வீசி இருக்கிறார்கள். இந்த மானங்கெட்ட காரியத்தை, லஞ்சத்திற்கிரையாகும் போலீஸ் அதிகாரிகளை விலைகொடுத்து வாங்கி, இட்டதை இட்டபடி செய்ய வைக்கிற அளவுக்கு வக்கும் வரிசையும் கண்ணன் தேவன் நிர்வாகத்திற்கு இன்னும் இருக்கிறது.

எனவே, ஒரு முழுநிறை விசாரணை மிகமிக அவசியம். மேற்கூறிய தீச்செயல்களில், காசுக்கு பொதுஜன ஊழியத்தை அடகு வைத்துவிட்டு இறங்கிய அதிகாரிகளை தயவு தாட்சணியம் இல்லாமல் தண்டிக்கவேண்டும். கேரள சர்க்கார் இந்தத் திசை வழியில் இயங்க ஆரம்பித்து விட்டார்கள். இது வரவேற்கத் தக்கது.

### துப்பாக்கிப் பிரயோகம்

துப்பாக்கிப் பிரயோகத்தைத் தவிர்க்க போலீசார் முன்நடவடிக்கை ஏதாவது எடுத்தார்களா? இல்லை. கண்ணீர்ப்புகையாவது உபயோகப்படுத்தினுர்களா? இல்லை. நமக்குக் கிடைக்கிற நம்பத்தக்க தகவல்களிலிருந்து துப்பாக்கிப் பிரயோகத்திற்கு இடமேயில்லை என்று தெரிய வருகிறது. இதற்கு முழுக் காரணம், வெள்ளை நிர்வாகத்தால் விலைக்கு வாங்கப்பட்டுவிட்ட லஞ்சப்பெருச்சாளிகளான சில போலீஸ் அதிகாரிகளே.

மக்களுக்கு ஆற்ற வேண்டிய கடமையும் பொறுப்பும் மந்திரி சபைக்கு உண்டு. எனவே, மந்திரி சபை இந்த சதியாலோசனையின் விஷ மூலத்தைக் கண்டுபிடித்துத் தீர வேண்டும். சில போலீஸ்காரர்களுக்கு மோதலில் சில காயங்கள் ஏற்பட்டன என்பது மெய். ஆனுல், அதற்காக துப்பாக்கிப் பிரயோகம் செய்வதும் தொழிலாளிகளைக் கொல்வதும் கொஞ்சமும் சரியல்ல. நகம் போச்சு என்பதற்காகத் தலைபோச்சு என்று ஈடு வைக்கலாமா?

### ஆணிவேர் எங்கே?

மேற்கூறிய கொலைகார திருவிளையாடல்களை எல்லாம் திரைக்குப் பின்னுல் நின்று இயக்குவிக்கும் சூத்ரதாரி யார்? கண்ணன் தேவன்—வெள்ளை நிர்வாகம்தான். அதற்கு ஏன் இத்தகைய பயங்கரமான மூளைக் கொதிப்பும் ஜன்னி வாத சுரமும் கண்டிருக்கிறது?

கம்யூனிஸ்ட் அரசாங்கம் இதற்கு முன்பு என்றும் இல்லாத விதத்தில் அதிக வரி விதிப்பது, வெள்ளை நிர்வாகத்திற்கு அடிவயிற்றில் நெருப்பை அள்ளிக் கொட்டியிருக்கிறது; பரம்பரைத் திமிரைக் கோபாவேசம் கொள்ள வைத்திருக்கிறது. கம்யூனிஸ்டு அரசாங்கம், ஏற்கனவே நிறைவேற்றப்பட்டுள்ள சட்டங்களின்படி தொழிலாளருக்குச் சலுகைகள் (உரிமைகள்) வழங்க வேண்டுமென்று வெள்ளை நிர்வாகத்தை வற்புறுத்துகிறது. மேலும் தொழிலாளி வர்க்கத்திற்கு அனுகூலமான சிலபல புதிய சட்டங்களை நிறைவேற்றத் திட்டமிட்டிருக்கிறது. அதே பொழுதில் வெள்ளை நிர்வாகமோ, தங்குதடையில்லாமல் பட்டப்பகற் கொள்ளையடிக்க நாக்கைச் சொட்டை விடுகிறது.

எனவே, கேரளத்தில்எப்படியும் கம்யூனிஸ்டுஆட்சியைக் கவிழ்த்திவிட எதையும் செய்ய கண்ணன் தேவன் வெள்ளை நிர்வாகம் தயாராக இருக்கிறது. ஆகவே, காங்கிரஸ்காரர்களையும் கம்யூனிஸ்டு-எதிரிகளையும் ஓரணி திரட்ட "சட்டமும் ஒழுங்கும் தவிடு பொடி ஆகிறது! குய்யோ முறையோ!" என்று போலிக் கூக்குரல் கிளப்புகிறது வெள்ளை நிர்வாகம்.

காங்கிரஸ் தலைமை—கம்யூனிஸ்டு-எதிரிகள்—வெள்ளை நிர்வாகம் ஓரணிவகுத்து ஒரே குரலில் "மத்திய சர்க்கார் கேரளத்தில் தலையிடவேண்டும்" என்று கோருகிறார்கள். இந்த பஜனைக் கோஷ்டியில் சென்னையிலுள்ள சில 'தேசபக்த' தினசரிகளும் கலந்துகொண்டு, தங்கள் குரல் வளத்தைக் காட்டுகின்றன.

இந்த சூதுவாது மிக்க 'புனிதப் போரை' ஏன் நடத்துகிறார்கள்? கேரளக் கம்யூனிஸ்டு ஆட்சி தொழிலாளர்களைச் சுட்டுத் தள்ளுகிறது என்று அவப்பேருண்டாக்கி, அதன் முகத்தில் கரியைப் பூசி, ஒழித்துக் கட்டத்தான். இன்னும் எதற்காக? காங்கிரஸ், ஐ. என். டி. யு. சி. ஆகியவற்றின் மானங்கெட்ட ஒத்துழைப்போடு, வெள்ளை நிர்வாகம் தனது குண்டோதரப் பசிதீர கொள்ளை லாபத்தை விழுங்கி, கோடிகோடியாக இங்கிலாந்துக்கு அனுப்பத்தான்.

பேராசைப் பெரும் பித்தம் கொண்ட இந்த வெள்ளை நிர்வாகம், கெண்டையைப்போட்டு, விராலைப் பிடிக்கும் தந்திரத்தில் இறங்கி இருக்கிறது. கம்யூனிஸ்ட் ஆட்சியைத் தலைகுப்புறக் கவிழ்த்தும் பொருட்டு, ஐ. என். டி. யு. சிக்குக் கை நிறையவும், காங்கிரஸுக்குப் பை நிறையவும் கொடுத்து வருகிறது.

### குண்டர்கள் தூண்டுதல்

வாங்கின காசுக்கு வாலை ஆட்ட வேண்டாமா? ஐ. என். டி. யு. சி. ஆயுதம் தாங்கிய குண்டாக் கலகத்திற்குத் தயாராகி வருகிறது. லஞ்சப் பேய்களான சில போலீஸ் அதிகாரிகளின் ஆசிர்வாதத்தோடு இந்த ஐ. என். டி. யு. சி. சங்கத்தைச் சார்ந்த குண்டர்கள், கத்தி, கட்டாரி, வேல், அரிவாள்போன்ற ஆயுதங்கள் தாங்கி, வேலைநிறுத்தக்காரர்களைத் தாக்கும் பொருட்டு தோட்டம் தோட்டமாகத் திரிகிறார்கள். இவ்வாறு திரிந்த குண்டர்களை, வேலைநிறுத்த நிலைமையை நேரில் காண மாறுவேடத்தில் சென்ற சட்ட மந்திரி கண்டு, அதன் விளைவாகச் சிலர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள் என்ற தகவல் நமக்குக் கிடைத்திருக்கிறது.

ஐ.என்.டி.யு.சி. குண்டர்களைக் கொண்டு வேலைநிறுத்தக்காரர்களைத் தாக்குவது—இதைக் கலவரம் என்று பெயரிட்டுத் தொழிலாளர்களைச் சுடுவது; இதுதான் போலீஸ் அதிகாரி—வெள்ளை நிர்வாகக் கூட்டணியின் இன்றையப் போர்த் தந்திரம்.

இந்த உண்மைகளை எல்லாம் தமிழ்ப்பெரு மக்கள் தெரிந்து கொள்ளமாட்டார்கள்; தெரிந்து கொள்ள முடியாது என்ற சுய போதையில், சில சென்னை தினசரிகள் வாய் புளித்ததா, மாங்காய் புளித்ததா என்று தலையங்கங்கள் தீட்டியுள்ளன. ஏற்கனவே நிகழ்ந்து வருவதுபோல், இந்தப் பிரச்னையிலும் இவைகளின் எண்ணத்தில் மண் விழப் போவது நிச்சயம்.

### சர்க்காரைக் கவிழ்க்கவா?

இறுதியாக, கம்யூனிஸ்டு—எதிர்ப்பு விஷங் கக்கிகள் பதில் இறுக்க, பொது மக்கள் உண்மை உணர, இரண்டொரு கேள்விகளையும் உண்மைகளையும் குறிப்பிடுகிறோம்.

ஒன்று காங்கிரஸ் சர்க்காரைத் தாக்குவதற்காகவே, கம்யூனிஸ்டுகள் வேலைநிறுத்தம் செய்வார்கள் என்பது கம்யூனிஸ்டு-எதிரிகளின் வழக்கமான குற்றச்சாட்டு. ஆனுல், இன்று கேரளத்தில் கம்யூனிஸ்டு ஆட்சியில், கம்யூனிஸ்டுகள் தலைமை தாங்கும் செங்கொடிச் சங்கம், ஒரு மாபெரும் வேலைநிறுத்தத்தை நடத்துகிறது. ஏன்? சர்க்காரைத் தாக்கிக் கவிழ்க்கவா! எந்த மட்டி, மடையன், முட்டாள், மூடன்கூட அப்படிச் சொல்லமாட்டான். இது சர்க்காருக்கு விரோதமா! அல்ல. அப்படியானுல் பிரச்னை, யார் ஆளுகிறார்கள் என்பதல்ல. தொழிலாளர்களும் மனிதர்கள், அவர்களை மனிதர்களாக நடத்த வேண்டும், அவர்களுடைய நியாயமான கோரிக்கைகளுக்கு இணங்க வேண்டும் என்பதுதான் பிரச்னை. இது கட்சிப் பிரச்னை அல்ல. தொழிலாளிப் பெருமக்களின் பொதுப்பிரச்னையாகும். கம்யூனிஸ்டு எதிரிகளே! குறைந்தபட்சம் இதையாவது உணர்வீர்களா?

மற்றொன்று: கம்யூனிஸ்டுக் கட்சியின் கேரள மாகாணக் கமிட்டியின் செயற்குழு நிறைவேற்றியுள்ள தீர்மானத்தைக் கொஞ்சம் புரட்டிப் பாருங்கள்! இந்த தீர்மானத்தோடு, போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் பற்றி காங்கிரஸ் கமிட்டிகளின் நிலையை ஒப்பிட்டுப் பாருங்கள். சென்னைத் துறைமுகத் துப்பாக்கிப் பிரயோகத்தைப் பற்றிச் சில மந்திரிகள் என்ன சொன்னுர்கள் தெரியுமா? போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் செய்து கூட்டத்தைக் கலைத்திராவிட்டால், தொழிலாளர்கள் கப்பல்களுக்கு நெருப்பு மூட்டியிருப்பார்கள் என்றார்கள். இவர்கள், கட்டுக்கதைகளைச் சொல்லி துப்பாக்கிப் பிரயோகத்தை நியாயப் படுத்தினுர்கள். இதோ கம்யூனிஸ்ட் கட்சியின் கேரள மாகாணக் கமிட்டி, பகிரங்க நீதிமன்ற விசாரணை வேண்டும், இறந்தவர் குடும்பங்களுக்கு நஷ்டயீடு கொடுக்க வேண்டும் என்று சர்க்காரைக் கேட்பதோடு, வெள்ளை முதலாளிகளால் லஞ்சம் கொடுக்கப்பட்ட சில போலீசாரையும் மந்திரி சபையின் கவனத்திற்குக் கொண்டு வந்திருக்கிறது. இதர ராஜ்யங்களில் இது மாதிரிப் பிரச்னைகளைக் காங்கிரஸ் சர்க்கார் கவனத்திற்குக்கொண்டு போனுல், அவர்கள் போலீசை தாங்கிப் பேசித் தடுக்குப் போடுவார்கள்.

ஆனுல் கேரளத்தில் ஆளும் கட்சி, துப்பாக்கிப் பிரயோகம் தவறு; அதைத் தவிர்த்தாக வேண்டும். போலீசைக் கட்டுப்படுத்திக் கடிவாளம் போட்டுத் தீரவேண்டும் என்கிறது. மந்திரி சபையும் 'செய்வேன்' என்கிறது. ஆளும் கட்சியும் மந்திரி சபையும் சரியான திசையில் ஆவன செய்ய இயங்குகின்றன.

கம்யூனிஸ்டு—எதிரிகளே; இது உங்கள் கண்ணில்படுகிறதா? இல்லாவிட்டால் யானை பார்க்க உங்களுக்கு வெள்ளை எழுத்துத் தான்.

### அந்த அழுகை எங்கே?

மூன்று; கொல்லம்-சந்தனத்தோப்புத் துப்பாக்கிப் பிரயோகம் நடந்ததும் செத்தவர்களுக்காகப் பலர் குடம் குடமாக முதலைக் கண்ணீர் வடித்தார்கள். நமது 'தேசபக்த' ஏடுகளெல்லாம் தாரை தாரையாக அழுதன. இன்று, மூணாற்றில் துப்பாக்கிப் பிரயோகத்தால் இறந்தவர்கள், செங்கொடிச் சங்கத்தைச் சார்ந்த தொழிலாளிகள். எனவே அந்தக் கருணுகர மூர்த்திகளுக்கும் 'மனிதாபிமான' ஏடுகளுக்கும்

(4-ம் பக்கம் பார்க்க)

# தொழிலாளி வர்க்கப் போராட்டங்களின் படிப்பினை

## சென்னையில் அ. இ. பாங்கி ஊழியர் சம்மேளனப் பொதுச்செயலாளர் விளக்கம்

சென்னை, அக். 24—

23-10-58 மாலை 6.30 மணிக்கு சென்னையில் கோகலே மண்டபத்தில் சென்னை ராஜ்ய பாங்கு சிப்பந்திகளின் சங்கங்களின் சார்பில் தோழர் ஆர். வி. கிருஷ்ணமூர்த்தி தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

தலைவர் முகவுரைக்குப்பின் சம்மேளனக் காரியதரிசி தோழர் சம்பத், அகில இந்திய பாங்கு சிப்பந்திகளின் சங்கப்பொதுச்செயலாளர் தோழர் பிரபாத்கார் எம்.பி.யை வரவேற்றுப் பேசினர்.

சென்னை நகரிலுள்ள பாங்கு சிப்பந்திகள் எண்ணற்ற தொழிற்சங்கங்களை தோழர் பிரபாத்காருக்கு மாலைகள் சூட்டி, கைத்தறி ஆடைகளைப் போர்த்தினர்.

### படிப்பினை

தோழர் பிரபாத்கார், ஜாம்ஷெட்பூர் டாட்டா தொழிலாளிகளின் வீரஞ்செறிந்த போராட்டங்களைப்பற்றி கோரிக்கைகளை பாங்கு சிப்பந்திகள் கோருகிறார்களோ அதே கோரிக்கைகளைக் காசு கட்டி, எந்த அளவிற்கு ஆதரவாக இந்தியப் பூராவும் சகோதர தொழிற்சங்கங்கள் ஆதரவு, பாங்கு சிப்பந்திகள் முதலிய மத்யதர சிப்பந்திகளின் தொழிற்சங்கங்கள் போராடி இருக்க வேண்டுமோ அந்த அளவுக்குக் கூட நடவடிக்கை ஒன்றுபட்ட நடவடிக்கையில்லாத காரணத்தால், இந்திய யூனியன் காங்கிரஸ் ஆட்சியாளரும், பீகார் ராஜ்ய காங்கிரஸ் ஆட்சியாளரும், மேலும் மேலும் கொள்ளை லாபம் பெறும் டாட்டா நிர்வாகமும், 28 ஆயிரம் தொழிலாளர் கலந்துகொண்ட போராட்டத்தை இராணுவத்தைக் கொண்டு அடக்கி வதைக்கக் கூடியதாகிவிட்டது. பாங்கு சிப்பந்திகள் தொழிலாளர் போலீஸைக் கொண்டே அடக்கின. காங்கிரஸ் ஆட்சியாளருக்கு இருப்பதையும் தோழர் பிரபாத்கார் எடுத்துக்காட்டி, இந்தியாவில் எங்கு தொழிலாளர் சிப்பந்திகள் கல்வரவுப் போராட்டங்கள் நடந்தாலும், அவை வெற்றி பெற, எல்லா சாதியமான நடவடிக்கைகளிலும் சகோதர தொழிற்சங்கங்கள், தொழிலாளர்கள், சிப்பந்திகள் ஈடுபடவேண்டுமென்பதை வலியுறுத்தினர்.

### கான்பூர் போராட்டம்

கான்பூரில் பஞ்சாலைத் தொழிலாளர்கள் ராஷனலிசேஷனை, வேலைபளுவை எதிர்த்துப் 82 நாட்கள் போராடினர். பாங்கு சிப்பந்திகள் போராட்டத்தை கான்பூர் பஞ்சாலைத் தொழிலாளர் முன்கூட்டியே போராடினர் என்ற உணர்வோடு, பாங்கு சிப்பந்திகள் பார்த்தனர். கான்பூர் தொழிலாளர்களுக்கு எந்த அளவு உதவினேன் என்பதையும் பார்க்க முடியுமென்று பிரபாத்கார் கேட்டுக் காட்டினர்.

### முன்னேடிகள்

1940ம் வருடம் லட்சக்கணக்கான பம்பாய்த் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு பங்குச்சிப்பந்திகளின் கோரிக்கைகளைப் பெற, போராடி வெற்றிபெற்றனர். ஆனால் படித்தவர்கள், எல்லா விஷயங்களும் தெரிந்தவர்கள் என்று கருதும் மத்யதர சிப்பந்திகளான பாங்கு சிப்பந்திகள் என்ற வருடம் இல் பஞ்சப்படிக்காகப் போராடினர், பெற்றுள்ள என்று பார்த்தால் தெரியுமென்று விளக்கிக் கூறி, மத்யதர சிப்பந்திகளின் கோரிக்கைகளுக்கும், முன் கூட்டியே தொழிலாளிவர்க்கம் வீர தீரமாகப் போராடிய வரலாற்றை, பாங்கு சிப்பந்திகள் கருத்தூன்றி கவனிக்க வேண்டுமென்றும், இந்தியத் தொழிலாளி வர்க்கத்தின் ஒரு பாகமே பாங்கு சிப்பந்திகள், மத்யதர சிப்பந்திகள் என்பதைப்பிரபாத்கார் தெளிவு படுத்தினர்.

### ஜாம்ஷெட்பூரில்

ஜாம்ஷெட்பூர் டாட்டா 28 ஆயிரம் தொழிலாளர்கள் முக்கியஸ்தர்கள் பழிவாங்கப்பட்டு, நூற்றுக்கணக்கானவர்கள் மீது வழக்குகள் தொடரப்பட்டிருக்கும். மீண்டும் தொழிற்சங்கத்தைப் பலப்படுத்தும் கொண்டு முதலாளி டாட்டாவையும் நிமிர் பிடித்த காங்கிரஸ் சர்க்காரையும் தொழிற்சங்க அங்கீகாரம், சம்பள உயர்வு, போனஸ் உயர்வு, பழிவாங்கப்பட்டோருக்கு வேலை முதலிய கோரிக்கைகளுக்காக போராடத் தயாராகி வருவதை பிரபாத்கார் குறிப்பிட்டார்.

அகில இந்திய பாங்கு சிப்பந்திகள் சங்கம் பெருவாரியான பாங்கு சிப்பந்திகளின் சங்கங்களைக் தன்னகத்தே கொண்டது. அங்கோரத்திற்காக பாங்கு முதலாளிகளை எதிர்த்துப் போராடி வருகிறது. தொழிற் சங்க அங்கீகார போராட்டத்தைத்தான் ஜாம்ஷெட்பூர் டாட்டா தொழிலாளர்கள் பெரும்பாலோர் உள்ள தொழிற்சங்கம் நடத்திவருவது என்பதை நயம்படப் பிரபாத்கார் எடுத்துரைத்தார்.

### பலப்படுத்துக

அகில இந்திய பாங்கு சிப்பந்திகள் சங்கம் எவ்வளவுக் கெவ்வளவு பலம் பெற்றிருக்கிறதோ, அந்த அளவு சக்தியோடே, பலமாக உள்ள பாங்கு முதலாளிகளை எதிர்த்துப் போராடி, பாங்கு சிப்பந்திகள் கவுரவமாகக் கோரிக்கைகளைப் பெற முடியுமாதலால், அகில இந்திய ஸ்தாபனத்தை எல்லா பாங்கு சிப்பந்திகளும், பாங்கு சிப்பந்திகளின் தொழிற் சங்கங்களும் மேலும்மேலும் சகல வழிகளிலும் பலப்படுத்த வேண்டுமென்றும், தொழிலாளி வர்க்க ஒற்றுமையை மேலும் மேலும் பலப்படுத்தி வரவேண்டுமென்றும் பாங்கு சிப்பந்திகளின் கோரிக்கைகளடங்கிய சாசனத்தை ஜனரல் கவுன்சில் கவனித்து ஆவன செய்யுமென்றும், அகில இந்திய ஸ்தாபன பலமே வெற்றிக்கு உத்தரவாதமென்று விளக்கி, பாங்கு சிப்பந்திகளின் போராட்டங்கள் கோரி உருக்கமான வேண்டுகோள் விடுத்தார். ரூ. 1,200 கூட்டநிதியே வசூலாயிற்று. நன்றி கூறியபின் கூட்டம் இனிது முடிந்தது.

# கம்யூனிஸ்ட் கட்சியையும் கேரள அரசையும் கவிழ்க்க அமெரிக்காவிடம் பிச்சை கேட்பதா?

## நாகை நகரசபைத் தலைவரின் தவருன போக்கு

நாகை, அக். 20—

இம்மாதம் 17-ந்தேதி நடைபெற்ற நகர சபைக் கூட்டத்தில் சேர்மன் ஏ.எம்.பி. திருவெம்பலம் செட்டியார் தலைமை வகித்தார். குச்சு வரி தள்ளுபடி செய்வது பற்றி 5 மாதங்களுக்கு முன் கொடுத்த தீர்மானம் அஜண்டாவில் சேர்க்கப்படவில்லை என்று கம்யூனிஸ்ட் உறுப்பினர் வெங்கடாசலம் ஆட்சேபம் எழுப்பினர். வேறு பல விஷயங்கள் அஜண்டாவில் சேர்க்கப்படவில்லை என்று வேறு சிலர் புகார் செய்தனர். ஆனல் சேர்மன் எல்லாம் கவனிக்கலாம் என்று கூறி தன் இச்சைப்படி கூட்டத்தை நடத்தினர். இந்தத் தவருன போக்கை பலர் ஆட்சேபித்தனர்.

## இது தேசீய சுதந்திரத்தையே அவமதிப்பதாகும்

### தோழர் பார்வதி கிருஷ்ணன் முழக்கம்

கோவை, அக். 23—

"இந்திய கம்யூனிஸ்ட் கட்சியையும் கேரள சர்க்காரையும் கவிழ்க்க உதவுங்கள் என்று மடிப்பிச்சை கேட்க அமெரிக்காவுக்குப் போனுர்கள் முன்னாள் நிதி மந்திரி டி. டி. கிருஷ்ணமாச்சாரியாரும் இன்றுள்ள மந்திரி மொரார்ஜி தேசாயும். அங்கே பொழிந்த அவதூறுகளும் கொஞ்சநஞ்சமல்ல. அது தேசிய கவுரவத்தையே அவமதிப்பதாகும்" என்று தோழர் பார்வதி கிருஷ்ணன் எம்.பி. கண்டித்தார்.

19ந் தேதி கோவை காந்திபுரத்தில் நடந்த பொதுக்கூட்டத்தில் பார்வதி கிருஷ்ணன் பேசுகையில், "மக்களிடம் நெருங்கிய தொடர்புள்ளவர்கள் கம்யூனிஸ்ட்கள். ஆனல் அவர்களை ஜனநாயக விரோதிகள் என்று அவதூறு செய்கிருர்கள். பல போராட்டத்துக்கு கம்யூனிஸ்டுகள் தலைமை தாங்கியுள்ளனர்.



வங்கத்தில் நடைபெற்ற உணவுப் போராட்டத்திலும், மகாராஷ்டிரத்தில் நடந்த மொழிவழி மாகாணக் கிளர்ச்சியிலும் மக்களுடைய உள்ளக்கிடக்கைகளைப் பிரதிபலிக்கின்ற வகையில் கம்யூனிஸ்டுகள் தலைமை தாங்கினர்கள். மக்களிடையே கம்யூனிஸ்டுகளுக்குள்ள நெருங்கிய தொடர்பின் விளைவுதான், கேரளத்தில் இன்று காணும் மலர்ச்சி ஆகும் என்ருர்.

இந்திய சர்க்காரின் பிற்போக்கான கொள்கைகள் காரணமாக நாட்டில் அந்நிய மூலதன ஊடுருவலும் அந்நியர் சுரண்டலும் அதிகரித்துவிட்டதென்றும் கண்டித்தார்.

விலைவாசி ஏற்றத்தைக் கட்டுப்படுத்த சென்னை சர்க்கார் நியாய விலைக் கடைகளைத் திறக்கவேண்டுமென்றும் காளீஸ்வரா மில்லை சர்க்காரே எடுத்து நடத்தவேண்டுமென்றும் கோவை நகர சபை கூட்டங்களுக்கு அநுமதி பெற்றுத்தான் பொதுமக்கள் கலந்து கொள்ளவேண்டுமென்ற தடை நீக்கப்படவேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின.

## மறியல் செய்ய முடிவு

வாணியம்பாடி, அக். 25—

கே. ஆறுமுகம் என்ற தொழிலாளியை லீவ் சம்பளம் கேட்டதற்கு தக்க நோட்டீசின்றி இங்குள்ள மதராஸ் ஓட்டல் முதலாளி வேலையிலிருந்து நீக்கி விட்டார். அவரை மீண்டும் வேலைக்கு வைக்காவிட்டால், அந்த ஓட்டல் முன்பு மறியல் செய்வதென்று தோழர் சையத் உம்மர் தலைமையில் கூடிய தொழிலாளர் முடிவு செய்தனர்.

## விவசாயிகளுக்கு கடன் வசதி தருக

இராஜபாளையம், அக். 23—

விவசாயிகளுக்குக் கடன் வசதி தரவேண்டுமென்றும் கிணறுகள் இல்லாத பகுதிகளுக்குக் கிணறுகள்போடவேண்டுமென்றும்சாலைகள், மின்சார வசதிக்கும் ஏற்பாடு செய்யவேண்டு மென்றும் கம்யூனிஸ்ட் கட்சி சார்பிலும் கட்சிக்கிளை சார்பிலும் விவசாய சங்கங்கள் சார்பிலும் 19-ந் தேதி இவ்வூருக்கு வந்த மந்திரி கக்கனுக்கு மகஜர்கள் கொடுக்கப்பட்டன.

## வேலூர் முனிசிபல் தொழிலாளர் சங்கம்

வேலூர், அக். 20—

சென்ற மாத இறுதியில் நடைபெற்ற முனிசிபல் தொழிலாளர் சங்க மகாசபைக் கூட்டத்தில் இவ்வாண்டு சங்கத் தலைவராக தோழர் ஆர். ராஜரத்தினம் பி.ஏ., பி.எல். தேர்ந்தெடுக்கப்பட்டார். உபதலைவர் பி. சீனிவாசன் எம்.சி., காரியதரிசி என். ஏ. பூங்காவனம், உப காரியதரிசி எம். கண்ணன், 11 நிர்வாகக் கமிட்டி உறுப்பினரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# கோடம்பாக்கம் ஆறுமுகம் மரண வழக்கு

## மேற்கொண்டு இரு சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர்

சென்னை, அக். 24—

சென்ற பிப்ரவரி 20-ல் கோடம்பாக்கம் போலீஸ் ஸ்டேஷனில் ஆறுமுகம் மரணமடைந்தது சம்பந்தமாக இரண்டு போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர்கள், நான்கு போலீஸ்காரர்கள் மீது தொடரப்பட்ட வழக்கு ஏழாவது மாகாண மாஜிஸ்டிரேட் எஸ். நடராஜன் முன்பு இன்று மீண்டும் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

இன்றைய விசாரணையின் போது பொன்னுஸ்வாமி, எதிராஜ் ஆகியோர் சாட்சியமளித்தனர்.

பொன்னுச்சாமி தன் சாட்சியத்தில் கூறியதன் சுருக்கமாவது:

"இறந்துபோன ஆறுமுகத்தைப் பதினைந்து வருஷங்களாகத் தெரியும். ஆறுமுகத்தின் வீட்டருகிலேயே நானும் வசித்து வருகிறேன். ஆறுமுகத்துக்கு எவ்வித நோயும் இருந்ததில்லை. பிப்ரவரி 17-ல் ஆறுமுகத்தை ஸ்டேஷனுக்கு அழைத்து வரவேண்டுமென்று வேதாசலம் இரவு 8 மணி அளவில் என்னிடம் சொன்னுர். மாணிக்கம், எதிராஜ், வீரமுத்து ஆகியோரும் உடன் வருவதாக அவர் கூறினுர். ஸ்டேஷனில் இரண்டு மூன்று போலீஸ்காரர்கள் இருந்தனர். நான் ஸ்டேஷனில் பார்த்த போலீஸ்காரர்களில் ஒருவர் இங்கிருக்கிருர். ஆறுமுகத்தை ஸ்டேஷனுக்குக் கொண்டு போய்விட்ட பிறகு சிறிது நேரம் கழித்து சப் இன்ஸ்பெக்டர் ராஜாங்கம் வந்தார். ஆறுமுகத்தின் தாயார், மதுரை, நாராயணசாமி முதலியோரும் அங்கிருந்தனர். பிறகு எங்களைப் போகலாம் என்று சப் இன்ஸ்பெக்டர் கூறிவிட்டார்.

21-ம் தேதி வெள்ளிக் கிழமை காலை 8 மணி சுமாருக்கு நான் மாடு பிடிக்கச் சென்றபொழுது ஆறுமுகம் இறந்துவிட்டானென்றும் ஆஸ்பத்திரிக்கு வருமாறும் வேதாசலம் என்னிடம் கூறினுர். நான் ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் போனேன். விஷயத்தைக் கேட்டதற்கு ஆறுமுகத்தைப் போலீசார் அடித்துப் போட்டுவிட்டதாக வேதாசலம் விளக்கினுர். சவத்தை எடுத்துக்கொண்டு வருவதாகவும் நாங்கள் வீட்டுக்குப் போகலாம் என்றும் வேதாசலம் கூறவே நாங்கள் வீட்டுக்கு வந்து விட்டோம். பிறகு இரவு 9 மணியளவில் ராஜு பிள்ளை தோட்டத்தில் ஆறுமுகத்தின் வீட்டில் சவத்தைப் பார்த்தேன்.

22ம் தேதி வேதாசலம் தந்த மனுவில் கையெழுத்திட்டேன். ஆறுமுகத்தை ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றபோது அவன் உடம்பு நன்ருகவே இருந்தது. அவனுக்கு வலிப்பு வந்ததும் கிடையாது. அதன் பிறகு அவனுடைய சவத்தைத்தான் பார்த்தேன்."

குறுக்கு விசாரணையின் போது சாட்சி கூறியதாவது:

வேதாசலத்தின் வீடு என் வீட்டுக்குப் பக்கத்தில் உள்ளது. கமிஷனரிடம் நான் மனுவேதும் கொடுக்கவில்லை. பிரதம மாகாண மாஜிஸ்டிரேட் கோர்ட்டிலும் எந்த மனுவும் கொடுக்கவில்லை. 22-ம தேதி நான் மூர்த்தியைப் பார்க்கவுமில்லை; எதிலும் கையெழுத்திடுமாறு மூர்த்தி என்னிடம் கூறவுமில்லை. வேதாசலம் தந்த மனுவில்தான் கையெழுத்திட்டேன். அதில் என்ன எழுதியிருந்ததென்பது தெரியாது.

ஆறுமுகத்தின் தாயார் எனக்குப் பந்து இல்லை. உட்கார்ந்திருக்கும் போலீஸ் உத்தியோகஸ்தர்களின் பெயரோ அவர்களுடைய அந்தஸ்தோ எனக்குத் தெரியாது.

பிரேதத்தைக் கொண்டுவந்த மறுநாள் 22-ம் தேதி காலையில் மூர்த்தியும் வக்கீல் கிருஷ்ணமூர்த்தியும் அங்கு வந்ததாகப் பார்க்கவில்லை.

நாங்கள் நான்கு பேரும்தான் ஆறுமுகத்தை ஸ்டேஷனுக்குக் கொண்டுபோய்விட்டதாகவும் பொய் சாட்சி சொல்ல யாரும் தங்களைத் தூண்டவில்லையென்றும் ஐந்தாவது மாகாண மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் தான் அன்றைய தினமே விசாரிக்கப்பட்டதாகவும் இந்த வழக்கில் சாட்சி சொல்ல மூர்த்தி தன்னை அழைக்கவில்லையென்றும் அவர் பிரசாரம் செய்ததாகக் கூறப்படுவதுபற்றி தனக்கு ஒன்றும் தெரியாதென்றும் மேலும் கேள்விகளுக்குப் பதிலளிக்கையில் பொன்னுஸ்வாமி கூறினுர்.

அடுத்தபடியாகச் சாட்சியமளித்த எதிராஜு, வேதாசலத்தின் சகோதரியான வள்ளியம்மாளுடன் தான் பதினைந்து வருடங்களாக வசித்து வருவதாகக் கூறினுர். ராஜு பிள்ளைத் தோட்டத்திலேயே அவர்களிருவரும் ஒரே வீட்டில் வசித்து வருவதாகவும் அவர் கூறினுர். 17-ம் தேதி போலீஸார் மதுரையைக் கைது செய்தபின் வேதாசலத்தின் வீட்டைச் சோதனையிட்டனர் என்றும் "உன் மகன் ஆறுமுகம் அகப்படுவது வரை நீ போலீஸ் ஸ்டேஷனில்தான் இருக்க வேண்டும்" என்று செல்லம்மாளை அழைத்துச் சென்றதாகவும் சாட்சி மேலும் கூறினுர்.

அன்றிரவு 8 மணிக்கு ஆறுமுகத்தை மற்ற ஐவருடன் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கூட்டிச் சென்றதாகவும அதன்பின் 21-ம் தேதி வெள்ளிக்கிழமை காலை ஆறுமுகத்தின் சவத்தையே தான் கண்டதாகவும் சாட்சி கூறினுர்.

குறுக்கு விசாரணையின்போது சாட்சி குறிப்பிட்டதாவது:

"நிகழ்ச்சி நடைபெற்றது எந்தத் தேதியன்று வேதாசலத்தைக் கேட்டபோது அவர் 17-ம தேதி என்று கூறினுர்.

அன்று நான் மூர்த்தியைப் பார்க்கவுமில்லை. முன்னர் ஐந்தாவது மாகாண மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் நடைபெற்ற விசாரணையின் போதுதான் மூர்த்தியை முதன் முறையாகச் சந்தித்தேன். வக்கீல் கிருஷ்ணமூர்த்தியை 20 வருடங்களாகத் தெரியும். 'ஆறுமுகத்தின் மரணம்' பற்றி வேதாசலம் தான் ஒரு மனுவில் தன்னிடம் கையெழுத்து வாங்கினுரே தவிர வேறு யாரும் கையெழுத்து வாங்கவில்லை.

# தோல் பதனிடும் தொழிலில் நெருக்கடி

## நூற்றுக்கணக்கான தோல் ஷாப்புகள் மூடப்பட்டன

### ஆயிரக்கணக்கான தொழிலாளர் வேலையிழந்து தவிப்பு

திண்டுக்கல், அக். 24—

தோல்பதனிடும் தொழிலில் என்றுமில்லாத நெருக்கடி ஏற்பட்டிருப்பதால் இந்தத் தொழிலைச் சார்ந்த தொழிலாளர்கள் வேலையிழந்து தவிக்கின்றனர். திண்டுக்கல் தோல்பதனிடுந்தொழிலாளர் சங்க நிர்வாகக் கமிட்டி கூட்டம் ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

இந்தத் தீர்மானத்தில் மேலும் குறிப்பிடப்பட்டிருப்பதாவது :—

இன்று ஏற்பட்டுள்ள நெருக்கடியால் சென்னை, திருச்சி, திண்டுக்கல், சேலம், வட ஆற்காடு, கோவை போன்ற இடங்களில் நூற்றுக்கணக்கான தோல்ஷாப்புகள் மூடப்பட்டு கிடக்கின்றன. இதனால் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலையிழந்து திண்டாடி நிற்கின்றனர். இந்த பயங்கர நெருக்கடியைக் கண்டும் சர்க்கார் நடவடிக்கை எடுக்காதிருப்பது வருந்ததக்கது.

மத்திய சர்க்கார் அமைச்சர் நித்தியானந்த கனுங்கோ சமீபத்தில் மக்கள் சபையில் பேசுகையில், தோல்பதனிடும் தொழிலில் ஏற்பட்டுள்ள நெருக்கடியை ஒப்புக் கொண்டார். அந்நிய வர்த்தகச் சூதாடிகளின் ஆதிக்கத்திலுள்ள லண்டன் தோல் மார்க்கெட்டை இந்தியாவுக்கு மாற்றும் ஆலோசனையையும் தெரிவித்தார்.

இவ்விதம் அரசாங்கமே நெருக்கடியை ஒப்புக்கொண்ட பிறகு தமிழகம் முழுவதிலுமுள்ள 40 ஆயிரத்துக்கு மேற்பட்ட தோல் பதனிடும் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு தங்கள் உரிமையைக் காக்கக் கிளர்ச்சி செய்ய முன்வருவது அவசியம்.

இது சம்பந்தமாக சென்னை ராஜ்ய தோல் பதனிடும் தொழிலாளர் மகாநாடு டிசம்பர் மாதம் திண்டுக்கல்லில் நடைபெறும். இவ்விதம் மேற்கண்ட தீர்மானம் கூறுகிறது. (ந. வி.)

## அகர ஓரத்தூர் பஞ்சாயத்துபோர்டு விவசாயத் தொழிலாளர் சங்க வெற்றி

நாகை, அக். 23—

நாகை தாலுகா 83வது வட்ட அகர ஓரத்தூர் பஞ்சாயத்து போர்டு தேர்தலில் விவசாயத் தொழிலாளர் சங்க உறுப்பினர் ரெ. சின்னையன், மா. பெருமாள், பெ. முருகையன், செ ராமசாமி ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கூட்டணியைச் சேர்ந்த பா. சிங்காரவேலு மழவராயரும் தெர்ந்தெடுக்கப்பட்டார்.

## கோவை ஜில்லா ஜெனரல் இன்ஜினீரிங் கூட்டம்

கோவை, அக். 24—

கோவை ஜில்லா ஜெனரல் இன்சினியரிங் அண்ட் மெக்கானிக்கல் தொழிலாளர் சங்கப் பேரவைக்கூட்டம் அக்டோபர் 21-ம் தேதி கோவை டவுன் ஹாலில் சங்கத்தலைவர் வி. கஸ்தூரிசாமி தலைமையில் நடைபெற்றது.

அப்போது சங்கத்தின் புத்தாண்டு நிர்வாகிகளாகப் பின் கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர் :—

எஸ். குழந்தைவேல் தலைவர், என். கே. கிருஷ்ணன், சி. என். கிருஷ்ணன் உபதலைவர்கள், டி. பாலன் பொதுக்காரியதரிசி, சி. ராமசாமி, எஸ். திருஞான சம்பந்தம் உபகாரியதரிசிகள், என். பழனியப்பன் பொருளாளர், மற்றும் 14 பேர் நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்கள்.

## மில்லில் போனஸ் போடத் தாமதம்

### தொழிலாளர்கள் உள்ளிருப்பு வேலைநிறுத்தம்

மதுரை அக். 23—

மதுரை ஆலைத் தொழிலாளர்கள் நேற்று (22.10-58) உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்தார்கள். சுமார் 8000 பேர்கள் பகல் வேலை பார்ப்பவர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். மதுரை ஆலையில் வேலை பார்க்கும் தொழிலாளர்களுக்கு 2 மாத அடிப்படைச்சம்பளம் போனஸாகவும், ரூ. 12 தீபாவளிக்குக் கொடுக்க வேண்டுமென்றும் நீதிமன்றம் தீர்ப்பளித்தது தெரிந்ததே. அதை சீக்கிரமாக காலதாமத மில்லாமல் செயல்படுத்த வேண்டுமென்று தொழிலாளர்கள் கோருகின்றனர். சென்னை உயர் நீதிமன்ற உயர் நீதிபதியின் தீர்ப்பை செயல்படுத்தாமல் நிறுத்தி வைக்கும்படி தலைமை நீதி மன்றத்திற்கு ஆலை நிர்வாகிகள் மனுச் செய்துள்ளதால் அதன் முடிவு தெரிந்த பிறகே போனசு பற்றிய சிக்கல் கவனிக்கப்படும் என்று ஆலை நிர்வாகிகள் தெரிவித்ததைத் தொடர்ந்து தொழிலாளர்கள் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்யத் தொடங்கினர். பின்னர் அனைவரும் தொழிலாளர் அதிகாரி தலையிட்டதின் பேரில் மீண்டும் நேற்று இரவு 10 மணிக்கு வேலை செய்யத் தொடங்கினர். தொழிலாளர்களின் கோரிக்கைகளை இம்மாதம் 25-ந் தேதி ஆலை நிர்வாகிகளுடனும், தொழிலாளர் பிரதிநிதிகளுடனும், கலந்து பேசலாம் என்றும் வேலை நிறுத்தத்தைக் கைவிடும்படியும், தொழிலாளர் அதிகாரி கேட்டுக் கொண்டதன் பேரில் தொழிலாளர் வேலை நிறுத்தத்தைக் கைவிட்டனர். (ந. வி.)

## குளித்தலை சானிட்டரி இன்ஸ்பெக்டரின் தர்பார்

குளித்தலை, அக். 23—

இவ்வூர் பஞ்சாயத் சானிட்டரி இன்ஸ்பெக்டரின் போக்கு நாளுக்குநாள் மோசமாகி வருகிறது. பஞ்சாயத் தொழிலாளர்களைக் கொடுமைப்படுத்துகிருர். தினம் மூன்று நான்கு பேர்களை கொண்டிக் காரணங்கள்கூறி சஸ்பெண்ட் செய்கிருர். 8 மணி நேர வேலைக்கு அதிகமாக 12 மணிநேர வேலை வாங்குகிருர். தொழிலாளர்களை 4, 5, 6, 7, 8 என்று தரம்பிரித்து சம்பளத்தைக் குறைத்துவிடுகிருர். இதனுல் தொழிலாளர்களிடையே மிகுந்த ஆத்திரம் ஏற்பட்டுள்ளது. (ந. வி.)

# கேரளத் தோட்டத் தொழிலாளர் போராட்டத்தை ஆதரித்து இயக்கம் நடத்துக!

## இறந்தவர்கள் குடும்பத்திற்கு பண உதவி தாரீர்!

சென்னை, அக். 25—

தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் செயலாளர் தோழர் டி. ஆர். கணேசன் கீழ்க்கண்ட அறிக்கை விடுத்துள்ளார்.

கேரளாவில் தேவிகுளம் பீர்மேடு பிரதேசத்தைச் சார்ந்த 35,000 தோட்டத் தொழிலாளர்கள் போனஸ், பிராவிடெண்டு பண்டு, கிராஜுவிடி, லீவு வசதிகளுக்காக 4–10–58 லிருந்து வேலைநிறுத்தப் போராட்டம் செய்து வருகின்றனர். தோட்ட முதலாளிகளும், பிரிட்டிஷ் முதலாளிகளும் ஒரு நியாயமான சமரச முடிவு செய்துகொள்ள முன்வர மறுப்பதால், தொழிலாளர்கள் தொடர்ந்து போராட்டம் நடத்தி வருகின்றனர். இதை எதிர்த்து ஐ என். டி. யு. சி.யும், காங்கிரசும் துஷ்பிரச்சாரம் செய்து வருகின்றனர். தோட்டத் தொழிலாளரின் குறைந்தபட்ச கோரிக்கைகள்மீது ஏ. ஐ. டி. யு. சி. சங்கமும் ஐ. என். டி. யு. சி. சங்கமும் சேர்ந்துதான் கூட்டு நடவடிக்கை எடுத்தபோதிலும், ஐ. என். டி. யு. சி. தலைமை தோட்ட முதலாளிகளுடன்சேர்ந்து தொழிலாளர் போராட்டத்தை எதிர்த்து வரும் காட்சியை நாம் இன்று கேரளாவில் பார்க்கிரேம். 25–10–58 லிருந்து ஒன்னரை லட்சம் தோட்டத் தொழிலாளர்கள் போராட முற்பட்டுள்ளனர். இந்த தோட்டத் தொழிலாளர் போராட்டத்திற்கு அகில இந்திய ரீதியில் ஆதரவு திரட்டி கிளர்ச்சி செய்வதென்று ஏ. ஐ. டி. யு. சி. முடிவு செய்துள்ளது. தமிழ்நாடு தொழிற் சங்கங்கள் கேரள தோட்டத் தொழிலாளரின் நியாயமான போராட்டத்தை ஆதரித்து இயக்கம் நடத்தவேண்டுமென்று தமிழ்நாடு தொழிற் சங்க காங்கிரஸ் சார்பாக நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

### நிதி தருக

தோட்டத் தொழிலாளர்மீது துர்பாக்கியவசமாக துப்பாக்கிப் பிரயோகம் செய்யப்பட்டது மிக வருந்தத்தக்கது. கேரள சர்க்காரும் துப்பாக்கிப் பிரயோகம் பற்றி விசாரணை செய்ய முன்வந்துள்ளது. வேலைநிறுத்த உரிமையை பறிமுதல் செய்யும் நோக்கத்துடன் போலீஸ் தலையிடுவதை கேரள சர்க்கார் அனுமதிக்காது என்ற முறையில் மந்திரிகள் கூறியுள்ளதை வரவேற்கிரேம். ஆனல் துப்பாக்கிப் பிரயோகத்தில் 20 வயதான பாப்பம்மாள் என்ற பெண்மணியும் 55 வயதான ஹசேன் ராவுத்தர் என்ற தொழிலாளியும் இறந்துவிட்டனர். இவர்களது இறுதி சடங்கில் தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் தலைவர்களான தோழர் பி. ராமமூர்த்தியும், கே. டி. கே. தங்கமணியும் பங்குகொண்டு இறுதி வணக்கம் செலுத்தியுள்ளார்கள். இவர்கள் குடும்பத்திற்கு பண உதவிகள் செய்யவேண்டியது ஒவ்வொரு தொழிற் சங்கத்தின் கடமையாகும். ஒவ்வொரு தொழிற் சங்கமும் தங்களால் ஆன பண உதவியை உடனே திரு. ரோஸம்மா புன்னூஸ், காரியதரிசி, தேவிகுளம் எஸ்டேட் ஒர்க்கர்ஸ் யூனியன், மூணாறு என்ற விலாசத்திற்கு அனுப்பக் கோருகின்றேன்.

# டெக்ஸ்டூல் கம்பெனி வேலைநிறுத்த நோட்டீஸ் வாபஸ்

## பிரச்னை தொழிற்கோர்ட்டுக்கு விடப்பட்டது

கோயமுத்தூர், அக். 24—

கோவை கணபதியில் இருக்கும் டெக்ஸ்டூல் கம்பெனியில் 352 பேர்களை ஆட்குறைப்பு செய்யப் போவதாக நிர்வாகம் ஒரு மாத நோட்டீஸ் கொடுத்தது.

இதை ஆட்சேபித்து கோவை ஜில்லா ஜெனரல் இன்சினீயரிங் அண்ட் மெக்கானிக்கல் தொழிலாளர் சங்கம் வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்தது.

இந்தப் பிரச்னை சம்பந்தமாக லேபர் கமிஷனரை சங்க பொதுச் செயலாளர் டி. பாலனும், தமிழ்நாடு தொழிற்சங்க காரியதரிசி டி. ஆர். கணேசனும் சென்ற 7-9-58ம் தேதி சென்னையில் சந்தித்துப் பேசினுர்கள்.

அப்போது லேபர் கமிஷனர் அளித்த வாக்குறுதிப்படி பிரச்னை தொழிற் கோர்ட்டுக்கு விடப்பட்டது. இதனுல் வேலை நிறுத்த நோட்டீசை வாபஸ் பெறுவது என்று தொழிற் சங்கம் முடிவு செய்தது.

## கம்யூனிஸ்ட் கட்சி பொதுக்கூட்டம்

சமயநல்லூர், அக். 20—

மதுரை தாலுகா சமயநல்லூர் கிராமத்தில் அக். 17ல் தோழர் பி. கருப்பையா தலைமையில் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

தோழர்கள் கே. டி. கே. தங்கமணி, வி. மதனகோபால், கே. பி. ஜானகியம்மாள் ஆகியோர் கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கைகளைப் பற்றியும், கேரள சர்க்காரின் கொள்கைகளைப் பாராட்டியும், காங்கிரஸ் சர்க்காரின் கொள்கையை விமர்சனம் செய்தும் பேசினர்.

சமயநல்லூர், ஊர்மெச்சுக்குளம் கிராம ஹரிஜனப் பெண்கள், அனந்த நம்பியார் உண்ணுவிரதத்தின்போது கூலியில் வசூல் செய்த 100 தபால் கார்டுகளில் 50 கார்டுகளில் தான், ரயில்வே தொழிலாளர் கோரிக்கைகளை ஆதரித்து கையெழுத்து வாங்கி ரயில்வே ஜெனரல் மானேஜருக்கு அனுப்பியிருந்தனர்; மீதி 50 கார்டுகளை அவர்கள் கம்யூனிஸ்ட் கட்சிக்காக என்ற மேடையில் கொண்டு வந்து கொடுத்தனர்.

சமயநல்லூர் கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை தீர்மானங்களைப் பிரேபித்தார்.

### தீர்மானங்கள்

1. சமயநல்லூர், ஊர்மெச்சுக்குளம் ராமனக்கில் காலியாக உள்ள இடத்தில், இடியாத வீடு உள்ள ஹரிஜன மக்களுக்கு சர்க்கார் நிலம் செய்து கொடுக்கவேண்டும்.
2. சமயநல்லூரில் தினமும் 8 மணி நேரமும் தபாலாபீஸ் திறந்து வைக்க வேண்டும்.
3. காளீஸ்வரா மில்லை சர்க்காரே ஏற்று நடத்தவேண்டும்.

# கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை மகாநாடுகள்

சென்னை, அக். 25—

### திருத்துறைப்பூண்டி

நகர கட்சிக் கிளை மாநாடு கே. வீரப்பன் தலைமையில் கூடியது. எஸ். வடிவேல், எம். பி. கண்ணுசாமி அரசியல் தீர்மானத்தை விளக்கி அறிக்கை சமர்ப்பித்தார்கள். புத்தாண்டுக்கு பி. காத்தையன் செயலாளர், ஏம். நாராயணன் உதவி செயலாளர், கே. பழனிவேல் பொருளாளர்.

கட்டிமேட்டு கிளை மாநாடு எஸ். வடிவேல் தலைமையில் கூடியது. பி.எஸ். தனுக்கோடி அறிக்கை சமர்ப்பித்தார். பி. நாகு காரியதரிசி, எம்.எஸ். தங்கவேலு உப-காரியதரிசி, வீரப்பன் பொருளாளர்.

பனையூர் கிளைக்கு புத்தாண்டு நிர்வாகிகளாக ஏ. ஆர். சிவசங்கரன் செயலாளர், பி. லட்சுமணன் துணை-செயலாளர், கே. மோஸஸ் பொருளாளர்.

மேட்டுப்பாளையம் கட்சிக் கிளைக்கு ஓ. சிவானந்தம் செயலாளர், எஸ். துரைசாமி துணை செயலாளர், கோவிந்தராஜு பொருளாளர்.

விளக்குடி கட்சிக் கிளைக்கு கே. வேலு செயலாளர்; வி. ஜெகந்நாதன் துணை செயலாளர்; செவந்தான் பொருளாளர்.

சாம்பவனோடை கட்சிக் கிளைக்கு கே. மாணிக்கம் செயலாளர்.

முத்துப்பேட்டை கட்சிக் கிளை மகாநாடு வி, சின்னதம்பி தலைமையில் கூடியது. புத்தாண்டிற்கு ஆர். எம். செல்லதுரை காரியதரிசி, கா. சின்னையன், பெ. ஆதிமுத்து துணைக்காரியதரிசிகள்; எஸ். பொதியப்பன் பொருளாளர்.

### குணியமுத்தூர்

குணியமுத்தூர் கட்சிக் கிளை மகாநாடு கே. ஆர். ராமசாமி தலைமையில் கூடியது. கே. எஸ். கண்ணையன் ஆண்டு அறிக்கை சமர்ப்பித்தார். புத்தாண்டு நிர்வாகிகள் : கே. எஸ். கண்ணையன் செயலாளர், ஏ. ஆறுமுகம் துணை செயலாளர்.

### குமரப்பநாயக்கன் பேட்டை

குமரப்ப நாயக்கன்பேட்டை கட்சிக் கிளை மகாநாடு கு. வேலாயுதம் தலைமையில் கூடி, புத்தாண்டுக்கு ஆர். என். சுப்ரமணியத்தை செயலாளராகவும், கு. பழனிவேலை துணை செயலாளராகவும் கு. வேலாயுதத்தைப் பொருளாளராகவும் தேர்ந்தெடுத்தது.

இக்கிராமத்திலுள்ள ஓராசிரியர் பள்ளிக்கு மாணவர் அதிகமாக வந்து படிப்பதால் மேலும் இரு ஆசிரியர்களை அனுப்புமாறு கல்வி அதிகாரிகளைக் கோருவதாக ஒரு தீர்மானம் நிறைவேறியது.

### சிக்கல்

சிக்கல் கட்சிக் கிளை மகாநாடு பி. காசியப்ப நாயுடு தலைமையில் கூடியது. சி. கோவிந்தசாமி காரியதரிசியானுர்.

### கொத்தமங்கலம்

தோழர் ரெ. முத்துக்கருப்பன் தலைமையில் 19-10-58ல் கம்யூனிஸ்ட் கட்சி கொத்தமங்கலம் கிளையின் மகாநாடு நடைபெற்றது. கிளைக் காரியதரிசி சி. சோ. தங்கசாமி ஆண்டறிக்கை வாசித்தார்.

புதிய வருடத்திற்கு சி. சோ. தங்கசாமி காரியதரிசியாகவும், எம். சின்னக்கண்ணு துணைக் காரியதரிசியாகவும், சி. அய்யாக்கண்ணு பொக்கிஷதாராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### நாகை

நாகை நகர கம்யூனிஸ்ட் கட்சி மகாநாடு 19-10-58-ல் தோழர் எம். முத்துசாமி தலைமையில் நடைபெற்றது. நகரக் கமிட்டிக் காரியதரிசி தோழர் ஜி. சின்னையன் 1955 நவம்பரில் நடைபெற்ற நகர மகாநாட்டிற்குப் பிறகு நடைபெற்ற வேலைகள், இயக்கங்கள் சம்பந்தமாக அறிக்கை சமர்ப்பித்தார்.

தஞ்சை ஜில்லாக் கமிட்டிக் காரியதரிசி தோழர் எம். காத்தமுத்து அமிருதசரஸ் கட்சிக் காங்கிரஸ் அரசியல், ஸ்தாபனத் தீர்மானங்களை விளக்கினுர்.

112 அங்கத்தினர்களைக் கொண்ட நாகை நகரக் கிளைக்கு தோழர் ஜி. சின்னையன் காரியதரிசியாகவும், தோழர் பி. காளிமுத்து உபகாரியதரிசியாகவும், மற்றும் 9 பேர் கொண்ட நிர்வாகக் கமிட்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

### தீர்மானங்கள்

விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தி, நியாய விலைக் கடைகள் மூலம் அரிசி வழங்கும்படி சர்க்காரை வற்புறுத்தியும்,

நீண்ட காலமாகச் சிறையில் வாடும் தொழிற்சங்க, விவசாய சங்கத் தலைவர்களையும், சகல அரசியல் கைதிகளையும் விடுதலை செய்யக் கோரியும்,

காளீஸ்வரா மில்லை சர்க்காரே எடுத்து நடத்தக் கோரியும், புதுக்கோட்டை மகா கணபதி மில் தொழிலாளர் போராட்டத்தை ஆதரித்தும், இன்னும் சில தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

# ஏ. கே. கோபாலனின் அறிக்கை

கள்ளிக்கோட்டை, அக். 22—

தோட்டத் தொழிலாளர் மீது நடந்த துப்பாக்கிப் பிரயோகம் துரதிர்ஷ்டவசமானதென்றும், இறந்த தொழிலாளர்களின் குடும்பங்களுக்கு உடனடியாக நஷ்டஈடு வழங்க வேண்டுமென்றும், துப்பாக்கிப் பிரயோகம்பற்றிப் பகிரங்க விசாரணை வேண்டுமென்றும் கோரி, தோழர் ஏ. கே. கோபாலன் எம். பி. அறிக்கை விட்டிருக்கிருர்.

### தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம்

கம்யூனிஸ்டுகள் தலைமையில் இயங்கும் எல்லா தொழிற்சங்கங்களும் தோட்டத் தொழிலாளர் மீது நடந்த துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்து அக்டோபர் 22-ந் தேதி இங்கு ஒரு ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

வெள்ளை முதலாளிகளும், லஞ்ச ஊழல் நிறைந்த ஒருசில போலீஸ் அதிகாரிகளுமே இத் துப்பாக்கிப் பிரயோகத்திற்குக் காரணமென்றும், குற்றம் புரிந்த போலீஸ் அதிகாரிகளுக்குத் தண்டனை வழங்கவேண்டுமென்றும், நியாயமான போராட்டத்தை முறியடிக்க, முதலாளிகள் போலீசைப் பயன்படுத்துவதை சர்க்கார் உடனடியாகத் தடை செய்யவேண்டுமென்றும் கோரி ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தேசாபிமானி ஆசிரியர் தோழர் இந்துசூடன் இக்கூட்டத்தில் பேசினுர்.

# 2½ லக்ஷம் தோட்டத்தொழிலாளர் ஸ்ட்ரைக்

## நூற்றுக்கு நூறு வெற்றி! என்றும் கண்டிராத அமைதி!

### தோட்டம் தோட்டமாய் தலைவர்கள் பிரச்சாரம்

திருவனந்தபுரம், அக். 25—

2½ லக்ஷம் கேரளத் தோட்டத் தொழிலாளர்களின் மாபெரும் வேலை நிறுத்தப் போராட்டம் இன்று 500-க்கு மேற்பட்ட தோட்டங்களிலே ஆரம்பமாகியது. எல்லா தோட்டங்களிலுமிருந்து பரிபூரண ஸ்ட்ரைக், வெற்றிகர மான ஸ்ட்ரைக், நூற்றுக்கு நூறு ஸ்ட்ரைக் என்ற செய்திகளே வந்துகொண்டிருக்கின்றன.

எந்தவிதமான அசம்பாவிதங்களும் ஏற்படாமல், என்றும் கண்டிராத அமைதியுடன் போராட்டம் நடைபெற்றது என்று போலீஸ் அதிகாரிகள் கூறுகிறார்கள்.

மூணார் வேலை நிறுத்தம் 22 வது நாளாக வெற்றிகரமாக நடைபெற்று வருகிறது. மூணார் ஒர்க்ஷாப் வேலை நிறுத்தமும் நீடித்து வருகிறது.

**கூட்டு செயல் குழு**

1957ம் ஆண்டுக்கு கூடுதல் போனஸ், பிராவிடெண்டு பண்டு, ரிஜிஸ்டர், பண்டிகை விடுமுறை ஆகிய முக்கிய கோரிக்கைகளை முன்வைத்து, அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ், ஐ. என் டி. யு. சி., ஐக்கிய தொழிற்சங்க காங்கிரஸ், ஹிந்த் மஸ்தூர் சபா ஆகிய மத்திய தொழிற்சங்க ஸ்தாபனங்களின் கூட்டு செயற் குழு தலைமையில், இந்த வேலை நிறுத்தம் நடைபெற்றது. முண்டக்காயம், பீர்மேடு, வண்டிப்பெரியார், நெடுங்கண்டம், புனலூர், தொடுப்புழா, மூவாட்டுப்புழா, பாலக்காடு, வாணியம்பாடி, நெல்லியம்பதி, திருவனந்தபுரம், திருவாங்கூர், கொச்சி பிரதேசங்களிலும், மலபார் சேர்ந்த வயநாடு தோட்டங்களிலும் வேலை நிறுத்தம் வெகு மும்முரமாக நடைபெறுகிறது.

கூட்டு செயல் கமிட்டியின் கன்வீனர் பிரகுளம்பாஷி என்ற ஐக்கியத் தொழிற்சங்க காங்கிரஸ் தலைவர் அறிக்கையில், "தனக்கு கிடைத்த தகவல்களிலிருந்து வேலை நிறுத்தம் அமைதியாகவும் பூரண வெற்றியுடனும் நடக்கிறது" என்றார்.

**ஒரு வார அவகாசம்**

அக். 27 முதல் நவம்பர் 3 வரை முதலாளிகள் சிந்தித்து சமரச முடிவுக்கு வர ஒரு வார அவகாசம் கொடுத்திருக்கிறது செயற் குழு. இந்த ஒரு வாரத்துக்கு வேலை நிறுத்தம் நடக்காது.

**உப கமிட்டியில்**

கூட்டு செயற் குழுவில் அமைக்கப்பட்ட உப கமிட்டியொன்று ஹைரேஞ்சு பிரதேசங்களுக்குச் சென்று யாதொரு கலவரமும் ஏற்படாதிருக்க சுற்றுப் பிரயாணம் செய்யும் என்று பாஷி கூறினார். இந்த உப கமிட்டியில் ஏ.ஐ.டி.யு.சி. சார்பாக பி. பாலச்சந்திரமேனனும், ஐ. என். டி. யு. சி. சார்பாக பி. கே. நாயர், ஐக்கிய தொழிற் சங்க காங்கிரஸ் சார்பாக ஸ்ரீகண்டன் நாயரும் பிரகுளம் பாஷியும் இருக்கிறார்கள்.

**மலபார் தோட்டங்களில் ஐ.என்.டி.யு.சி. வேலை**

மலபாரில் சுமார் 100 தேயிலை, ரப்பர் தோட்டங்களில், ஏ ஐ.டி.யு.சி. தலைமையிலுள்ள தொழிலாளர்களெல்லாம் வேலை நிறுத்தம் செய்தார்கள். ஆனால், ஐ. என். டி.யு.சி. தலைமையிலுள்ள தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யவில்லை. இங்குள்ள ஐ. என்.டி.யு.சி. தலைவர்கள் வேலை நிறுத்தம் செய்ய வேண்டாமென்று பிரச்சாரம் செய்தார்கள்.

**மூணார் போராட்டமும் இதில் சங்கமமாகும் ?**

3 வாரங்களாக மூணாறில் நடைபெறும் போராட்டமும், இந்த அகில கேரள போராட்டத்துடன் சேருமென்று தெரிகிறது. மூணாறு தலைவர்கள் கோட்டயத்திற்கூடி, கேரள போராட்டக் கமிட்டியின் முடிவையொட்டி, அதுபோல ஒரு வாரம் வரையும் முதலாளிகளுக்கு அவகாசம் கொடுக்க, வேலை நிறுத்தத்தை நிறுத்தி வைக்கப்போவதாக ஒரு தகவல் கிடைத்திருக்கிறது.

**அற்பர்களின் வதந்திகள்**

தோட்டங்களில் சட்டம் அமைதி ஏற்பாடுகளைச் செய்யவேண்டாமென்று போலீஸ் ஐ. ஜி.யையும் இதர போலீஸ் அதிகாரிகளையும் விலக்கப் போவதாக சில பத்திரிகைகள் வதந்திகளைப் பரப்பிவிட்டன. 'இதெல்லாம் சுத்தப் புளுகு நிறைந்த இழிவுப் பிரச்சாரம்' என்று கூறி சட்ட அமைச்சர் வி. ஆர். கிருஷ்ணய்யர் மறுத்தார்.

**டிசம்பர் 1-ம் தேதி தீர்ப்பு வெளிவரும்**

மூணாறு துப்பாக்கிப் பிரயோகத்தை விசாரணைநடத்த கோட்டயம் அடிஷனல் ஜில்லா நீதிபதி டி. எம், கிருஷ்ணன் நம்பியார் நியமிக்கப்பட்டுள்ளார். அவர் டிசம்பர் 1-ம் தேதி மந்திரி சபையிடம் விசாரணை அறிக்கையை சமர்ப்பிப்பார். பலாத்காரத்தை உபயோகிக்கக்கூடிய அளவு மூணாறு தோட்டங்களில் நிலைமை இருந்ததா என்பதைப் பற்றியும், அப்படி இருந்தால் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய வேண்டிய அளவுக்கு அவசிய மேற்பட்டதா என்பது பற்றியும் விசாரணை நடைபெறும்.

துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டு மந்திரிசபை கவலைப்படுவதாகவும், பொறுப்புள்ள சில ஸ்தாபனங்கள் துப்பாக்கிப் பிரயோகம் நியாயமல்ல என்று கருதுவதாகவும் சர்க்கார் அறிவித்துள்ளது.

## சம்பள உயர்வு கோரி அடையாள வேலைநிறுத்தம்

### ஹிந்த் மஸ்தூர் சபா நிர்வாகக்குழு சிபாரிசு

திருவனந்தபுரம், அக். 25—

ஹிந்த் மஸ்தூர் சபாவின் நிர்வாகக்குழு இன்று இங்கு கூடியது. அரசாங்கத்திலும் இதர தனியார் நிறுவனங்களிலுமுள்ள ஊழியர்களுடைய சம்பளம் பொதுவான அடிப்படையில் கூட்டப்படவேண்டும் என்பதை வலியுறுத்துவதற்காக நாடுமுழுதும் அடையாள வேலைநிறுத்தத்தில் ஈடுபடவேண்டும் என்று ஹிந்த் மஸ்தூர் சபாவின் ஜெனரல் கவுன்ஸில் அறைகூவலொன்று விடுக்கவேண்டுமெனச் சிபாரிசு செய்யத் தீர்மானித்தது.

## இருமொழி பம்பாய் பற்றி பிரதமர் நேரு

ஹைதராபாத், அக். 25—

இருமொழி பம்பாய் ராஜ்யம் பற்றி இன்று பிரதமர் நேரு பம்பாய் ராஜ்யத்தின் 6பிரதேச காங்கிரஸ் கமிட்டி காரியதரிசிகளோடு 45 நிமிடங்கள் விவாதித்தார்.

பிரதேச மக்களின் நலன்களுக்காகவே இருமொழி ராஜ்யம் என்பதே தம் கருத்தாக எப்பொழுதும் இருந்துவருவதாக பிரதமர் கூறினதாகக் கூறப்படுகிறது. மேலும் ஜனநாயகமுறையில் மக்கள் எதையும் மாற்ற உரிமையுள்ளவர்களாயிருப்பதால் எக் காரியமுமே முடிவானதென்றும் சரியானதென்றும் கூறுவதற்கில்லை என்றும் நேரு கூறினார்.

## தாம்பரம் மண்டலக் காங்கிரஸ் தலைவர் தோற்கடிக்கப் பட்டார்

### நகர் நலக்கமிட்டி உறுப்பினர் வெற்றி

தாம்பரம், அக். 25—

அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்த, தாம்பரம் பஞ்சயத் போர்டு தலைவர் தேர்தல் இன்று காலை 11 மணிக்கு பஞ்சாயத் போர்டு அலுவலகத்தில் நடைபெற்றது.

நகர் நலக் கமிட்டி அபேட்சகர் திரு. மூனு. ஆதிகேசவலு 9 ஓட்டுகள் பெற்று வெற்றி பெற்றார்.

**காங்கிரஸ் தோல்வி**

எதிர்த்துப் போட்டியிட்ட மாஜி பஞ்சாயத் போர்டு தலைவரும், தாம்பரம் மண்டலக் காங்கிரஸ் கமிட்டித் தலைவருமான தா. மு. தனபால் 4 ஓட்டுகள் மாத்திரமே பெற்று தோல்வியடைந்தார்.

**வெற்றி ஊர்வலம்**

நகர் நலக் கமிட்டி அபேட்சகர் வெற்றிபெற்றார் என்ற செய்தியைக் கேட்டதும், வெளியே கூடியிருந்த நூற்றுக் கணக்கான மக்களும், வெற்றி பெற்ற ஆதிகேசவலுக்கும், நகர் நலக் கமிட்டி சார்பில் வெற்றி பெற்ற இதர அங்கத்தினர்களுக்கும் மாலைகள் அணிவித்து, நகர் நலக் கமிட்டி வாழ்க! நகர் நலக் கமிட்டி ஸ்தாபகர் ஜீவா வாழ்க! தலைவர் ஆதி வாழ்க! தேர்தல் திட்டத்தை அமுல் நடத்துவோம் என்ற கோஷங்களை முழங்கிக் கொண்டு ஊர்வலமாகச் சென்றனர்.

கடந்த 5 வருட காலமாக மக்களை மதியாமல் யதேச்சாதிகாரம் நடத்தி வந்த மண்டலக் காங்கிரஸ் கமிட்டி தலைவர் தோல்வியடைந்தது குறித்து தாம்பரம் பொதுமக்களும் வியாபாரிகளும் குதூகலமாக இருக்கிறார்கள்.

(ந. நி.)

## அலுமினியம் தொழிலாளர் அறப்போருக்கு ஆதரவு ஆர்ப்பாட்டம்

சென்னை, அக். 25—

நிர்வாகத்தின் ஆட்குறைப்பு திட்டத்தை எதிர்த்து உள்ளிருப்புப் போராட்டம் நடத்திவரும் அலுமினியம் தொழிலாளருக்கு ஆதரவாக 24-10 58ல் 1-வது வட்ட கம்யூனிஸ்ட் கட்சி கிளையின் சார்பில் ஒரு ஊர்வலம் நடைபெற்றது. ம. சிங்கார வேலர் மன்றத்திலிருந்து காசிமேடு, துரைபாசாகிப் தெரு வழியாக திருமதி காட்டாயி அம்மாள் தலைமையில் சுமார் 50 தாய்மார்கள் கைக் குழந்தைகளுடன் கம்பெனி கேட் அருகில் வந்து ஆர்ப்பாட்டம் செய்து கலைந்தனர். போராட்டம் நீடிக்கிறது.

# நில வரம்புக்கு மந்திரி சுப்ரமண்யம் எதிர்ப்பு

## அ. இ. காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் நிலச் சீர்திருத்தம் பற்றி விவாதம்

### பரிசீலனை செய்ய 15 பேர் கொண்ட கமிட்டி ஏற்படுத்த முடிவு

ஹைதராபாத், அக். 25—

இன்று அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் விவசாய உற்பத்தி சம்பந்தமான தீர்மான விவாதத்தின்போது, சென்னை நிதி அமைச்சர் திரு. சி. சுப்ரமண்யம், நிலவுடமைக்கு வரம்பு கட்டுவதால் உணவு உற்பத்தி பெருகாது என்று கூறினர். இன்னும் சில மெம்பர்களும் நிலவுடமைக்கு வரம்பு கட்டுவதை எதிர்த்தனர்.

இன்று பிற்பகலில் அ. இ. காங்கிரஸ் கமிட்டியின் பகிரங்கக் கூட்டம் மீண்டும் இங்கு ஆரம்பமாயிற்று.

கூட்டம் துவங்கியதும் முதலில் எடுத்துக்கொள்ளப்பட்ட தீர்மானம், விவசாய உற்பத்தியைப் பற்றியது.

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட முடிவுக்குள் நாட்டில் ஒரு ஏக்கரில் பயிராகும் தான்ய உற்பத்தியை இரட்டிப்பு ஆக்கவேண்டுமென்று அத்தீர்மானம் அறைகூவுகிறது.

பஞ்சாப் முதலமைச்சர் பிரதாப்சிங் கெய்ரோன் தீர்மானத்தைப் பிரேரேபித்துப் பேசினர். அவர், இந்தியா இப்பொழுது அரசியல் சுதந்திரத்தை அடைந்துவிட்டதால், இனி மக்கள் பொருளாதாரப் புரட்சிக்காக வேலை செய்யவேண்டுமென்று நேற்று பிரதமர் நேரு கூறியதைக் குறிப்பிட்டு உணவு உற்பத்தியைப் பெருக்காமல் இதைச் சாதிக்க முடியாது என்றார். அப்பொழுதுதான் நாடு சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ள முடியுமென்றார். உற்பத்தியில் நவீன முறைகளைக் கையாள்வதின்மூலம் இதை சாதிக்கமுடியும், என்றார்.

**சஞ்சீவ ரெட்டி**

ஆந்திர முதலமைச்சர் திரு. சஞ்சீவ ரெட்டி, தீர்மானத்தை ஆதரித்துப் பேசுகையில், உணவுற்பத்தியைப் பெருக்கும் பிரச்சினைக்கு முக்கிய கவனம் செலுத்தப்படவில்லை யென்றார். இன்று இந்தியாவில் ஒரு ஏக்கருக்கு அதிக விளைச்சலைக் காட்டும் மாகாணங்களில் ஆந்திராவும், சென்னை மாகாணமும்தான் முன்னணியில் நிற்பதாகக் குறிப்பிட்டார். இன்று விவசாய உற்பத்தி பாதகமடைந்துள்ளதற்கு முக்யமான காரணங்களில் ஒன்று, விவசாயி இன்று மிகவும் புறக்கணிக்கப்பட்டுள்ள நிலையிலிருப்பதே. அவனுடைய தேவைகள் நியாயமான முறையில் பூர்த்தி செய்யப்பட வேண்டும். விவசாயிக்கு அவன் உற்பத்தி செய்யும் பொருள்களுக்கு விலை சிறிது கூடுதலாகக் கொடுக்கப்படவேண்டும். பொருள்களை உபயோகிக்கும் பொதுமக்களுக்கும் கொஞ்சம் நிவாரணம் அளிக்கவேண்டும். இன்று விலைஉயர்வுக்கு சமூக விரோத சக்திகளின் நடவடிக்கைகளே காரணம். அவர்களின்மீது கடுமையான நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும், என்றார்.

**சி. சுப்ரமண்யம் திருத்தம்**

உணவுற்பத்தியின் எல்லா அம்சங்களையும், நிலச் சீர்திருத்தக் கொள்கையையும் பரிசீலனை செய்வதற்கு 15 பேர்கள்கொண்ட ஒரு கமிட்டியை ஏற்படுத்த வேண்டுமென்றும், அக் கமிட்டி அடுத்த அ. இ. கா. க. கூட்டத்திற்குள் தன் அறிக்கையை சமர்ப்பிக்க வேண்டுமென்றும் கோரும், ஒரு திருத்தத்தை திரு. சுப்ரமண்யம் மேற்படி தீர்மானத்திற்கு பிரேரேபித்தார். அக்கமிட்டியின் உறுப்பினர்களை காங்கிரஸ் தலைவரே நியமிக்கலாம், என்றும் அத் திருத்தம் கூறியது.

விவசாயிகள் நவீன உற்பத்தி முறைகளைக் கையாளும்படி செய்யும் முயற்சியில் ராஜ்யங்கள் இதுவரை தோல்வியடைந்துள்ளன. உணவுற்பத்திப் பெருக்கம் சம்பந்தமாக எல்லோரும் ஒத்துக்கொள்ளும் ஒரு ஒன்றுபட்ட வேலைத் திட்டம் தேவை. காங்கிரஸ்காரர்களிடையில் மட்டுமின்றி, இதுபற்றி இதர அரசியல் கட்சிகளுடனும் ஒரு உடன்பாட்டுக்கு வரவேண்டும், என்றும் சி. சுப்ரமண்யம் கூறினர்.

இதற்காகத்தான் ஒரு கமிட்டி ஏற்படுத்த வேண்டுமென்று தான் திருத்தம் கொண்டு வந்திருப்பதாக சி. சுப்ரமண்யம் கூறினர். நிலச் சீர்திருத்தம் சம்பந்தமாக எந்தக் கொள்கையையும் பிடிவாதமாகக் கடைப்பிடிக்கும் போக்கு கூடாது என்றார்.

நிலவுடமைக்கு வரம்பு கட்டுவதற்கு தன்னைப் பொறுத்தவரையிலும், தான் அதற்கு எதிரல்லவென்றும், ஆனல் இந்தியாவில் 90 சத நிலம் சிறு உடமையாளர்கள் வசம்தான் இருந்தபோதிலும், அதனுல் உணவு உற்பத்தி பெருகவில்லையென்பதே தங்கள் அனுபவம் என்றும், ஆகவே பெரிய நில உடமைகளை சிறிது சிறிதாகப் பிளக்கவேண்டியது அவசியமில்லை என்று தோன்றுவதாகவும் கூறினர். நிலச்சீர்திருத்தக் கொள்கையை அமுல் நடத்துவதினுல் விவசாயிகளிடத்தில் உற்சாகத்தையும், தங்களுக்கு நல்லது ஏற்படுகிறது என்ற திருப்தி மனப்பான்மை ஏற்படும் சூழ்நிலைமையும் ஏற்படுமென்பது வாஸ்தவம்தான். ஆயினும் அதனுல் உற்பத்திகுறைந்துவிடும் என்று தான் நினைப்பதாகவும் கூறினர், இந்தத் தீர்மானத்தைக்கூட, காங்கிரஸ்காரர்கள் மனப்பூர்வமாக ஏற்று நடத்த முன்வராவிட்டால் வெறும்காகிதத் தீர்மானமாக மாறும் அபாயம் இருக்கிறது என்றார்.

**மகாவீர் தியாகியும் எதிர்க்கிருர்**

திரு. மகாவீர் தியாகி (உ. பி.) யும், நிலவுடமைக்கு வரம்பு கட்டுவதை, தான் முழுக்க முழுக்க எதிர்ப்பதாகக் கூறினர். தீர்மானத்தில் 3-வது ஐந்தாண்டுத் திட்ட முடிவுக்குள் 100 சதம் விளைச்சலை அதிகப்படுத்த வேண்டும் என்றிருப்பதை நீக்கிவிட வேண்டும் என்று ஒரு திருத்தத்தைப் பிரேரேபித்தார்.

இவ்வாறு வெறும் கோஷம் போடுவது காங்கிரசுக்கு அபக்யாதியையே உண்டாக்குகிறது என்றார்.

**அல்குராய் சாஸ்திரி**

உணவுப் பிரச்சினைக்குப் பரிகாரம் காணுவதில் இதர கட்சிகளுடனு ஒத்துழைக்க வேண்டுமென்பது கூடாது; அதற்கு அவசியமேயில்லை. காங்கிரஸ் மிகுந்த பலத்துடன் உள்ளது. அது, தான்மட்டுமே உணவுப் பிரச்சினையைத் தீர்க்க முடியும், என்று திரு. அல்குராய் சாஸ்திரி (உ.பி.) கூறினர்.

திரு. சி. சுப்ரமண்யத்தின் திருத்தத்தை ஏற்றுக்கொள்வதாக, தீர்மானத்தைப் பிரரேபித்த கெய்ரான் கூறினர். மேற்படி திருத்தத்துடன் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.



## 23 அல்ஜீரிய விடுதலை வீரர்கள் கொலை

ஓரான், அக். 25—

விமானப் படையின் உதவியுடன் பிரஞ்சுத் துருப்புகள் அல்ஜீரிய சுதந்திர வீரர்களுடன் நடத்திய கடுமையான கைகலப்பில் 23 அல்ஜீரியர்களைக் கொன்றதாக ஒரு செய்தி கூறுகிறது. மேற்கு அல்ஜீரியாவில் அபெஸூக்கும் லெம்செனுக்கும் இடையிலேயே இக் கைகலப்பு நடந்திருக்கிறது.




### சென்னை 1

28—10—58

காலை முதல் ஒலிபரப்பு

7-00 துதிப் பாடல்கள் (திருச்சியில் உள்ளபடி); 7–10 நிகழ்ச்சிக் குறிப்புகள், வானிலை அறிவிப்பு; 7-15 தமிழில் செய்தி; 7-30 மதுரை டி. சேதுராமன் பாட்டு 8.15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

12-30 நடுத்தரப் பள்ளிகளுக்கு; 1-00 கீதமாலிகா; 1-30 கீத மஞ்சரி; 1.40 ஹிந்தியில் செய்தி; 1-50 கீதமாலிகா; 2-00 தமிழில் செய்தி; 2-10 உயர்தரப் பள்ளிகளுக்கு 2.40 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்ருவது ஒலிபரப்பு

5-30 Y. ராஜகோபாலன் வயலின்; 6-05 பிராந்தியச் செய்திகள்; 6-15 கிராம நிகழ்ச்சிகள் (திருச்சி அஞ்சல்); 7-15 தமிழில் செய்தி; 7-30 குரல் வகை; 7-45 பாட்டு (திருச்சியில் உள்ளபடி); 9-00 லலித சங்கீதம்; 9-15 ஹிந்தி பாடம் ஏ. எி. காமாக்ஷி ராவ் நடத்துவார்; 9-30 விஜய வாடாவில் உள்ளபடி; 11-00 துதிப்பாடல்கள்; 10-30 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

### திருச்சி

28—10—58

காலை முதல் ஒலிபரப்பு

7-00 இசைக்கதிர்; 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள்; 7-15 தமிழில் செய்தி; 7-30 கோவை வி. பர்வத குமாரி பாட்டு; 8-00 ஆங்கிலத்தில் செய்தி; 8–15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

12-30 நடுத்தரப் பள்ளிகளுக்கு; 1-00 கதம்பம்; 1-40 ஹிந்தியில் செய்தி; 1-50 கே. ஆர். கணபதி புல்லாங்குழல்; 2-00 தமிழில் செய்தி; 2-10 உயர்தரப் பள்ளிகளுக்கு; 2–40 இடைவேளை; 2.45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்ருவது ஒலிபரப்பு

5.45 இசைப் பயிற்சி; 6-00 அறிவிப்புகள் 6-05 பிராந்தியச் செய்திகள்; 6–15 கிராம நிகழ்ச்சிகள்; 7-15 தமிழில் செய்தி; 7-30 கலித்தொகைக் காட்சிகள் பேச்சு; 7-45 பாட்டு; 9–00 ஆங்கிலத்தில் செய்தி; 9-15 ஒலிப்பதிவுகள் 9-30 [illegible]; 10-00 ஒலிபரப்பு முடிவு.

## ஒற்றுமையே . . .

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இவற்றுக்காகத் தனியாகவும், பிற ஸ்தாபனங்களுடன் சேர்ந்தும் ஐக்கியத்துடன் போராடி வந்திருக்கிறது.

உலக சமாதானம் நிலைபெற வேண்டும் என்பதற்காகவும், காலனி ஆதிக்கத்தை எதிர்த்தும், இந்த ஸ்தாபனம் நடத்திய கிளர்ச்சி தனிச்சிறப்புடையது. தொழிற் சங்கங்களுக்கும் அரசியலுக்கும் சம்பந்தமே இல்லை என்ற மலட்டுப் போக்கை எதிர்த்து, ஏகாதிபத்திய யுத்தச் சதிகளை எதிர்த்தும், ராணுவக் கூட்டணிகளை எதிர்த்தும், அணு ஆயுத ஒழிப்பு ஆகிய ஒருமைப்பாடு, சோஷலிஸ்ட் நாடுகளுடன் நல்லுறவு, தேசிய சுதந்திரத்திற்குப் பாதுகாப்பு என்று பல்வேறு துறைகளிலும் இந்த ஸ்தாபனம் அரும்பணியாற்றி யுள்ளது.

பின்தங்கி நின்ற தொழிற் பகுதிகளான தோட்டங்கள், சுரங்கங்கள் இவற்றிலும், முன்னேறியுள்ள உருக்கு ஆலைகள் சர்க்கார் நிறுவனங்களிலும், தொழிற்சங்கங்கள் வளப்பட்டு உயர்ந்துள்ளன. 1957 பொதுத் தேர்தலில் தொழிற்சங்க இயக்கப்பிரதிநிதிகள் பெரு வெற்றியடைந்துள்ளனர். கேரளத்தில் தொழிலாளி வர்க்கப் பிரதிநிதிகள் ஆட்சியே நிறுவப்பெற்றுள்ளது.

இன்று இந்த ஸ்தாபனத்தை அசட்டை செய்ய முடியாது. சர்க்காரிடமிருந்தும் விடாக்கொண்டர்களானமுதலாளிகளிடமிருந்தும் அங்கீகாரத்தைப் பெற்றுள்ளது.

இந்தியத் தொழிலாளி வர்க்கத்தின் உயிர்நாடியான கடமை ஐக்கியத்தைக் கட்டி வளர்ப்பது தான். வர்க்க ஒற்றுமை ஓங்கினுல்தான் தொழிலாளி வர்க்கம் சமூகத்தில் ஒரு பிரதான சக்தியாக விளங்க முடியும். தேசியப் புனர் நிர்மாணப்பணியில் ஆக்கபூர்வமாக இறங்கமுடியும்.

இந்த ஐக்கியத்தை நிலைநாட்ட அ இ. தொ. சங்கக் காங்கிரஸ் உறுதிபூண்டிருக்கிறது. இந்தச் சிறந்த நோக்கத்துடன் இந்த விழாவை விமரிசையாகக் கொண்டாடவேண்டும்.

நாடெங்கும் கூட்டங்கள் ஆர்ப்பாட்டங்கள் நடத்திக் கோலாகலமாக இவ்விழாவைக் கொண்டாடுக.

அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸ் நீடூழி வாழ்க!

இந்தியத் தொழிலாளிவர்க்க ஒற்றுமை வெல்க

ஜனநாயக மக்கட் பகுதிகளின் சகோதர ஐக்கியம் தழைப்பதாக!

உலக சமாதானம் வாழ்க!

உலகத் தொழிலாளர்களே ஒன்று சேருங்கள்!

## 'இரத்தம் கொடுத்து வளர்த்த காங்கிரஸ் என்னைக் குற்றவாளி என்கிறதே'

### டால்மியா ஓலம்

டெல்லி, அக். 22—

பாரத் இன்ஷுரன்ஸ் பாலிசிதாரர்களின் பணத்தைக் கையாடிய தொழிலதிபர் டால்மியா மீது வழக்குத் தொடரப்பட்டிருக்கும் நிலையில், மன்றத்தில் தான் 'சுத்தவாளி' என்று கூறினார்.

"பல காரியங்களுக்கும் நான் நன்கொடை அளித்திருக்கிறேன். சில சமயங்களில் சுயநலத்திற்காக இருக்கலாம், சில சமயம் பொதுநலத்திற்காக, சில சமயம் பேர் புகழுக்காக இருக்கலாம்" என்றார்.

காங்கிரஸுடன் தனக்கிருந்த தொடர்பையும் அதற்கு தாராளமாக நன்கொடை அளித்ததையும் குறிப்பிட்ட அவர் தான் பணத்தைப்பற்றி சட்டை செய்தவரல்ல என்று கூறிக் கொண்டார்.

"நான் என் இரத்தத்தைக் கொடுத்து வளர்த்துள்ள காங்கிரஸ் கட்சி, அக்கட்சியின் சர்க்கார் என்னைக் குற்றவாளி என்று வழக்குத் தொடுத்திருக்கிறதே" என்றார். (பி.டி.ஐ.)

## மாஸ்கோவில் கோமுல்கா

### சோவியத் மக்களின் உற்சாகமான வரவேற்பு

லண்டன், அக். 25—

போலந்து கம்யூனிஸ்ட் கட்சிச் செயலாளர் விளாடிஸ்லா கோமுல்கா இன்று மாஸ்கோ வந்து சேர்ந்தார். போலந்து அரசாங்கப் பிரதிநிதிகள், கம்யூனிஸ்ட் கட்சிப் பிரதிநிதிகள் ஆகியோரடங்கிய ஒரு நல்லெண்ணத் தூதுக் குழுவுக்குத் தலைவராகவே அவர் வந்திருக்கிறார்.

சோவியத் பிரதமர் குருஷேவ், ஜனாதிபதி வொரொஷிலோவ் இதர உயர்தர சோவியத் அதிகாரிகள் ஆகியோர் இவர்களை வரவேற்றனர்.

கோமுல்காவும் குருஷேவும் பின்னர் ராணுவத்தினரின் மரியாதை அணிவகுப்பைப் பார்வையிட்டனர்.

பெருந்திரளாகக் கூடியிருந்த சோவியத் மக்கள் மலர்ச்செண்டுகளுடன் போலந்து தலைவர்களை வரவேற்றனர். ரஷ்ய, போலந்து நாட்டுக் கொடிகளை அவர்கள் தாங்கி வந்தனர்.

போலந்தின் நல்லெண்ணத் தூதுக்குழுவில் போலந்து ஜனாதிபதி அலெக்ஸாண்டர் ஸவாட்ஸ்கியும் ஒருவர்.

## மந்திரி மாளவியா மிகோயான் சந்திப்பு

மாஸ்கோ, அக். 25—

இந்திய சர்க்கார் சுரங்க இலாகா மந்திரி கே. டி. மாளவியா சோவியத் உதவிப் பிரதமர் மிகோயானை சந்தித்துப் பேசினார்.



## சரணாகதி அல்ல யுத்த நிறுத்தமும் சமாதான தீர்வுமே வேண்டும்

### அல்ஜீரியத் தலைவர்கள் ஆலோசனை

கெய்ரோ, அக். 24—

யுத்த நிறுத்த உடன்பாடு பற்றியும், சமாதானமாக அல்ஜீரியப் பிரச்சினையைப் பேசித் தீர்ப்பது பற்றியும் பிரெஞ்சுப் பிரதமர் டிகால் பேசியதின் முழு விபரம் கிடைத்த பின் அதுபற்றி முடிவு செய்யப் போவதாக சுதந்திர அல்ஜீரிய அரசாங்கத்தின் பிரதமர் பெர்ஹாட் அப்பாஸ் இன்று இங்கு கூறினார்.

அல்ஜீரியத் தலைவர்கள் பாரிஸ் நகரத்திற்கு வந்து பேச்சு நடத்த அழைப்பு அளிக்கப்படும் என டிகால் கூறியதைப் பற்றி அவர் மந்திரிசபை சகாக்களுடன் கலந்து ஆலோசித்துக் கொண்டிருக்கிறார். [illegible]

இரு. அப்பாஸ் அவர்களே பிரான்சுடன் யுத்தநிறுத்த உடன்பாடு செய்யத் தயார் என்று முன்னர் அறிவித்திருக்கிறார்.

பிரான்சுடன் பேச்சுவார்த்தை நடத்துவதை ஒரு கௌரவமான நடவடிக்கையாகக் கருதுவதாக [illegible] தெரிவித்திருக்கிறார்.

[illegible] அல்ஜீரிய வீரர்கள் வெள்ளைக் கொடியைப் பிடித்துக் கொண்டு பிரான்சிடம் சரணடைய வேண்டும் என்று [illegible] அவர்கள் பிரான்சுடன் பேச்சு நடத்துவதற்குப் பதிலாக [illegible] காணவே விரும்புகின்றனர்.

## வண்ணாரப்பேட்டையில் நடந்த கொலை

### மேலும் புதிய விவரங்கள்

சென்னை, அக். 25—

நேற்று மாலை, விளக்கு வைக்கும் நேரத்தில், நெ. 59, திருவொற்றியூர் ஹை ரோடு வீட்டிலிருந்து கன்னியப்ப ஆசாரியும், அவர் மனைவி பாலு அம்மாளும், அதே ரோடில் தங்கள் வீட்டிற்கு எதிர்ப்புறமிருந்த நெ. 540, கவர்லால் மார்வாடி கடையில் மூக்குத்தியை அடகு வைத்து, வீட்டிற்கு வந்திருந்த விருந்தாளிகட்கு அரிசி, பருப்பு, காய்கறி வாங்கிச் செல்ல சென்றபோது, மேற்படி மார்வாடி கடையில் கன்னியப்ப ஆசாரியை எச். 1 வண்ணாரப்பேட்டை போலீஸ் ஸ்டேஷனைச் சேர்ந்த இரு போலீஸ்காரர்கள்— மப்டியிலிருந்தவர்கள் "எங்கடா காட்டன் ரசீது," என்று நையப் புடைத்தனர். கன்னியப்ப ஆசாரி காட்டன் சூதாட்டம் தனக்குத் தெரியாதென்றும், தன்னை அடிக்க வேண்டாமென்றும் கைகூப்பி கும்பிட்டுக்கொண்டிருக்கையில் மேலும் மேலும் அரக்கத்தனமாக போலீசார் விலாவிலும், கழுத்திலும் மார்பிலும் அடிக்கவே ரத்தம் கக்கிக்கொண்டே தலை தொங்கிப் போனதால் கன்னியப்ப ஆசாரி கீழே விழுந்து இறந்தார் என்று தெரிகிறது.

தன் புருஷனை அடிக்கவேண்டாம், காட்டன் சூதாட்டம் அவருக்குத் தெரியாது என்று அவர் மனைவி கைகூப்பி போலீசாரை எவ்வளவோ வேண்டியும் போலீசார் கருணை காட்டவில்லை.

மார்வாடி கவர்லால் தைரியமாக இரு போலீசாரையும் சவத்தோடு பூட்டிவிட்டு நெ. 93க்கு போன் செய்து, போலீஸ் வான் வந்தவுடன் சவத்தையும், இரு போலீசாரையும் வானில் வந்த போலீசாரிடம் ஒப்படைத்தார் என்று தெரிகிறது. நூற்றுக் கணக்கான, ஆயிரக்கணக்கான மக்களுக்கு காட்டுத்தீபோல் செய்தி பரவி பெரும் கூட்டமாக கூடிவிட்டனர்.

இன்று மாலை ஜெனரல் ஆஸ்பத்திரியில் பிரேத பரிசோதனை நடைபெற்றதென்றும், மாஜிஸ்டிரேட் முன்னிலையில் போலீசாரால் அடித்துக் கொல்லப்பட்ட கன்னியப்ப ஆசாரியின் மனைவி பாலு அம்மாள், மார்வாடி கவர்லால் தாண்டவராயன் என்றமூவர் சாட்சியம் அளித்துள்ளதாகவும் தெரிகிறது.

**கண்டன ஆர்ப்பாட்டம்**

நேற்று இரவு 12 மணிக்கு பேசின் பிரிட்ஜ் ஏரியாகமிட்டியின் கீழுள்ள 5-வது வட்டக் கிளை கம்யூனிஸ்டுகள் 150 பேர்களடங்கிய ஊர்வலத்தை 5-வது வட்டத்தில் நடத்தி, நிரபராதி போலீஸாரால் அடித்துக்கொல்லப்பட்டதை உடனே விசாரி, மக்களை அடித்துக் கொல்லாதே என்று கோஷமிட்ட வண்ணம் ராபின்சன் பார்க்சென்று, 300 பேர்களடங்கிய பொதுக்கூட்டத்தை நடத்தினர்.

**தீர்மானம்**

வட சென்னை கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரும், ஐக்கிய பீடித் தொழிலாளர் சங்க பொதுக் காரியதரிசியுமான தோழர் ரத்தினம் முதலியோர் போலீசார் மிருகத்தனமாக கன்னியப்ப ஆசாரியை அடித்துக்கொன்றதை கண்டித்துப் பேசி போலீஸ் மந்திரி பக்தவத்சலனும், போலீஸ் கமிஷனர் அருளும் உடனே விசாரித்து, இறந்தவர் குடும்பத்திற்கு போதிய நஷ்டயீடும், குற்றவாளிகள் மீது வழக்குத் தொடுக்கவும், கைதுசெய்வோரை போலீசார் அடிக்கக் கூடாதென்று உத்தரவு பிறப்பிக்கவேண்டுமென்றும் கோரி தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டு கூட்டம் இரவு 2 மணிக்கு முடிந்தது என்று இந்திய கம்யூனிஸ்ட் கட்சி சென்னை ஜில்லா கமிட்டி செயலாளர் அறிவிக்கிறார்.

## தாய்லாந்து போலீஸின் வெறி உச்சமடைகிறது

பாங்காங், அக். 25—

வியட்னுமைச் சேர்ந்த கம்யூனிஸ்டுகள் என்று கூறி தாய்லாந்து போலீஸ் சுமார் 70 பேரை இன்று கைது செய்திருக்கிறது.

வெளிநாடுகளிலிருந்து வரும் கம்யூனிஸ அபாயத்தைத் தடுக்கவே இந்த நடவடிக்கையாம்.

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒரு பொட்டுக் கண்ணீர்கூட வரவில்லை.

மாருக, ஐ. என். டி. யு. சி. தலைவர், வேலைநிறுத்தக்காரர்மீது இன்னும் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும் என்கிறார். காங்கிரஸ் தலைவர்கள் மத்திய சர்க்கார் தலையிட வேண்டும் என்கிறார்கள். அவர்களில் சிலர், வேலை நிறுத்தத்தைச் சட்ட விரோதம் என்றுபிரகடனம் செய்யச் சொல்கிறார்கள்.

ஆனுல் கம்யூனிஸ்டுக் கட்சிக்கு இவர்கள் மாதிரி இரட்டை நாக்குக் கிடையாது.

துப்பாக்கிப் பிரயோகம் திட்டவட்டமாகத் தவிர்க்கப்படவேண்டும். காங்கிரஸ் வேலை நிறுத்தமானுலும் சரி, கம்யூனிஸ்டு வேலை நிறுத்தமானுலும் சரி, துப்பாக்கிப் பிரயோகம் நடந்தால், பகிரங்க நீதிமன்ற விசாரணை வேண்டும்; நஷ்டயீடு கொடுக்கப்படவேண்டும். சென்னையில், காங்கிரஸ் ஆட்சியில் துறைமுக வேலை நிறுத்தத்திற்கு ஒரு நீதி, 'இந்து' வேலை நிறுத்தத்திற்கு ஒரு நீதி காட்டியதுபோல், நம்மிடம் இரட்டை நீதி கிடையாது. போலீஸ், 'இந்து' வேலை நிறுத்தத்தில் காட்டிய கவனத்தில் (விழிப்புணர்ச்சியில்) பத்தில் ஒரு பங்கு காட்டியிருந்தால்கூட துறைமுக வேலை நிறுத்தத்தில் துப்பாக்கிப் பிரயோகம் ஏற்பட்டிராது.



ஜனசக்தி பிரஸ்ஸில் அச்சிட்டு வெளியிட்டவர்: எஸ். கிருஷ்ணசாமி
ஆசிரியர் ப. ஜீவானந்தம்.
முகவரி: 32, பிராட்வே சென்னை-1.
Janasakthi, Tamil Daily,
32 Broadway, Madras-1.